# புது மாட்டுப் பெண்

எஸ். வி. வி.



அல்லயன்ஸ் கம்பெனி
மயிலாப்பூர் :: சென்னை.



[ரூ. 1-2-0

## நன்றி

இந்தக் கதை முதலில் 'ஆனந்த விகடனில்' வெளி வந்தது. இதைப் புத்தக ரூப மாக வெளியிட அநுமதி தந்த தற்காக அவர்களுக்கு எங்கள் நன்றி. — பதிப்பாளர்.

## பொருளடக்கம்



Rajan Electric Press,
Madras. (1944112910.)

# புது மாட்டுப் பெண்

## 1

### துரைச்சா அவ்வளவு அசடு!

**பு**து மாட்டுப் பெண் வருகிறாளே, எப்படி இருக்குமோ எ
னவோ என்று சந்தேகப்பட்டுக்கொண்டிருந்தேன். குற்
மில்லை. குற்றமில்லையாவது! வீடே கலகலவென்றாகிவி
டது; குடும்பமும் ரொம்பச் செவ்வைப்பட்டுப் போய்வி
டது! துரைச்சா இவ்வளவு யோக்கியனாயும், நல்லவ
யும், குணசீலனாயும் மாறிவிட்டானே, அந்த ஆச்சரியத்
யல்லவா முன்னாடி சொல்லவேண்டும்? அவன் மு
கோபமும், அவன் கர்வமும், எதையும் தூக்கியெறிந்
மாதிரிப் பேசுகிறதும், ஆகாசம் அரை விரற்கடை மாதி
அவன் பாவிக்கிறதும், பட்டு விழுகிறதும் சகிக்கத் தரமல்
இங்கே இருக்கும் துரும்பை அங்கே எடுத்துப் போட
மாட்டான். மற்றவர்களெல்லோரும் அவனுக்குக் கைகட
டிச் சேவகம் செய்யவேண்டும். சரியான வேளையில் சாப
பிட வரமாட்டான். இரவுச்சாப்பாட்டிற்குப் பத்தரை

மணிக்கு வந்தாலும் வந்தான்; பன்னிரண்டிற்கு வந்தாலும் வந்தான். ஒரு நாள் சினிமாவிற்குப் போனேன் என்பான். ஒரு நாள் சினேகிதன் வீட்டிற்குப் போயிருந்தேன் என்பான். அவன் தாய் அதுவரையில் சாப்பாட்டை வைத்துக்கொண்டு காத்திருக்கவேண்டியதுதான். வந்து சாப்பிட்டாலும் சாப்பிடுவான்; சாப்பாடு வேண்டியதில்லை யென்று படுக்கப் போய்விட்டாலும் போய்விடுவான். சில சமயம், "என்ன சமையல்?" என்று கேட்பான். அவன் மனத்திற்கு பிடித்ததாயிருந்தால் போடச் சொல்லிச் சாப்பிடுவான்; இல்லாவிட்டால் "எனக்குச் சாப்பாடு வேண்டியதில்லை" என்று போய்விடுவான். அவன் தாய் அவனுக்கு இஷ்டமான சமையலை அன்போடு செய்துவைத்துக் காத்துக்கொண்டிருந்தால் அன்றைத்தினம், "நான் ஒரு சினேகிதன் வீட்டில் சாப்பிட்டு வந்துவிட்டேன்" என்று பத்திரிகையை எடுத்துப் படிக்க ஆரம்பித்துவிடுவான்.

"பண்ணின் பண்டங்களெல்லாம் வீணாய்ப் போய் விடுகிறதே" என்று அவன் தாய் அங்கலாய்ப்புப் படுவாள். ஒரு நாள் சாப்பாடு வகையாய் அமையாவிட்டால், "என்றைக்கு நீ நன்றாய்ச் செய்து போட்டிருக்கிறாய்?" என்று தாய்மேல் சீறி விழுவான்.

"ஒரு நாள் தவறாமல் பத்தரைக்கும் பன்னிரண்டுக்கும் வருகிறாயே? யாரடா உனக்கு இப்படிச் சாப்பாட்டை வைத்துக்கொண்டு காத்திருக்கிறது?" என்று கேட்கலாமோ? பேசலாமோ? மூக்கை அறுத்துக் கையில் கொடுத்துவிடுவான். ஒரு சமயம் தாய் நயமாக அவனிடத்தில் அதைப்பற்றிப் பேசினால், "சொந்த வீடாயும், பிரியமாய் நீ ஒருத்தியும் இருக்கவேதானே அம்மா, சுதந்தரமாய் இந்த மாதிரி எல்லாம் இருக்கிறேன்? ஹோட்டலில் சாப்பிடுகிறதென்றால் எட்டு மணியானால்

அவன் ஹோட்டலே மூடிக்கொண்டு போய்விடுவான். நம்ம வீடு என்று இருக்கிறதனுலேதான் இப்படியெல் லாம் யதேச்சையாக இருக்கிறோம். நம்ம வீட்டிற்கும் பிறத்தியார் வீட்டிற்கும் என்ன அம்மா வித்தியாசம்?" என்று ரொம்ப இச்சகமாய்ப் பேசுவான்.

"வீட்டில் இருக்கிறவர்களை ஹிம்சைப்படுத்தினுல் தான் நம்ம வீடு என்கிற சுதந்திரத்தைக் கொண்டாடின மாதிரியோடா?" என்று அவன் தாய் கேட்பாள். எதைச் சொன்னுலென்ன? அவன் பழம் பாட்டையேதான் பாடிக் கொண்டிருப்பான்.

வீட்டில் இருக்கும்பொழுதாவது சரியான வேளையில் சாப்பிடலாமே! அதுவும் மாட்டான். சாப்பாட்டு வேளை யில் சோம்பேறித்தனமாய் படுத்துக்கொண்டாவது இருப் பான்; அல்லது எவனுவது சிநேகிதனேடு அரட்டை அடித்துக் கொண்டிருப்பான். "ஏண்டா மணி பதினென்று ஆகப்போகிறதே, எழுந்து ஸ்நானம் செய்துவிட்டுச் சாப் பிட வாயேன்" என்று அவன் தாய் கூப்பிட்டால், "நான் இரண்டு மணி நேரம் பொறுத்துத்தான் சாப்பிடப் போகிறேன். மற்றவர்களெல்லாம் சாப்பிடலாம்" என்று ஒரு வேலேயும் இல்லாமல் சோம்பேறித்தனமாய் உட் கார்ந்து கொண்டிருப்பான். குளிக்கிறது, எண்ணெய் தேய்த்துக் கொள்ளுகிறது எல்லாவற்றிற்கும் இதேமாதிரி தான். இதில் ஒரு கூத்து அல்லவா! இவைகளை யெல் லாம் அவன் ஒரு பெரிய பெருமை என்று நினைத்துக் கொண்டிருக்கிறுன். முப்பத்திரண்டு குணங்களில் இரண்டு குணங்கள் தவிர மற்றவைகளெல்லாம் பிள்ளை யிடத்தில் இருக்கின்றன என்பார்களே-அதாவது தனக் காகவும் தெரியாது, ஒருத்தர் சொன்னுலும் கேட்கமாட் டான் என்று-அது துரைச்சாவுக்குத்தான் முழுவதும் பொருத்தமானது.

"பெண்ஜாதி என்று ஒருத்தி வரட்டுமடா! இந்த ஆட்டத்தையெல்லாம் அப்பொழுது பார்க்கிறேன்" என்று அவன் தாய் அடிக்கடி சொல்லிக் காட்டுவாள்.

"பெண்ஜாதி வந்தால் என்ன? உன்னைவிட அவள் ஒசத்தியோ? தாயாரைவிட, நம்ம பேச்சைக் கேட்டுக் கொண்டு கிடக்கவேண்டிய பெண்ஜாதி என்ன செய்து விடுவாளாம்?" என்று பிரதாபமாய்ப்பதில் சொல்லுவான்.

"என்ன செய்வாளென்பதை அப்பொழுது சொல்லிக் காட்டுகிறேண்டா. அவள் வந்து முன்னே ரெண்டு இடி, பின்னே இரண்டு இடி இடித்தாளானுல் கட்டிப் போட்ட நாய் மாதிரி விழுந்து கிடக்கமாட்டாயா? அப்படி ஒருத்தி வந்து உன்னை இடிக்கவேண்டும்; என் கண் குளிர நான் அதைப் பார்க்கவேண்டும். அதுதான் என் ஆசை" என்று அவன் தாய் குத்திக் காட்டுவாள். துரைச்சா அவ்வளவு அசடாய் இருந்தான்.

## 2

## செல்லத்தின் பெற்ருேர்

துரைச்சாவிற்குச் செல்லத்தைக் கல்யாணம் பண்ணுவதற்கே ரொம்ப தூரம் யோசனை பண்ணும்படியாயிருந்தது. 'இண்டர்மீடியட்' பரீட்சை கொடுத்த பெண்கள் எங்கேயாவது குடித்தன வழியாக இருப்பார்களோ இருக்கமாட்டார்களோ! இருக்கமாட்டார்களென்பதே ஜனங்களுடைய அபிப்பிராயம். படிப்பு, கலைப்பயிற்சி இவைகள் ஏறினுல் ஆணுக்காணுலும், பெண்ணுக்காணுலும் விவேகம் அதிகமாகி, நடத்தை, குணம் இவைகளெல்லாம் மேம்பட்டுவிடும் என்பது இயல்பாக எதிர்பார்க்க வேண்டியது. அவைகளே கல்வியின் பிரயோஜனம். ஆனுல் இந்தக் காலத்தில் ஆணுக்கும் சரி, பெண்ணுக்கும்

சரி, பணம் ஏராளமாய்ச் சம்பாதிக்க அது அனுகூலமானதாகக் கருதப்பட்டாலும், நடத்தை விஷயத்தில் மூளைக் கோளாறு ஏற்படுத்தி விடுவதாக ஓர் அபிப்பிராயமும் உண்டு. படித்துக் கலைப் பயிற்சியடைந்த பெண், பள்ளிக்கூட வாத்தியாரா யிருக்கலாம், டாக்டரா யிருக்கலாம்; மோட்டார் ஏரோப்ளேன் ஓட்டலாம்; பெரிய சபைகளில் பிரசங்கம் செய்யலாம்; சங்கீதக்கச்சேரி பண்ணலாம்; டான்ஸ் ஆடலாம்; சினிமாவில் சேர்ந்து நடிக்கலாம்; புத்தி கூர்மையான இன்னும் அநேக விதமான தொழில்களைச் செய்யலாம். ஆயிரக் கணக்காகப் பணத்தையும் சம்பாதிக்கலாம். ஆனல் பெண்ஜாதியா யிருந்து குடித்தனம் செய்ய மாத்திரம் லாயக்கில்லாதவள் என்பதுதான் தற்காலத்தில் ஜனங்கள் சகஜமாக எண்ணும் கொள்கை. அம்மாதிரிப் பெண்களைக் கல்யாணம் செய்துகொள்ளுவதென்ருல் ஒரு தடவைக்குப் பத்துத் தடவையாக யோசனை செய்துதான் செய்து கொள்ளுவார்கள். படித்த பெண்களென்ருல் ரொம்ப 'மிலிட்டேரி' யாய் இருக்கும், சீராயும், அனுகூலமாயும் இருக்கமாட்டார்கள் என்கிற சந்தேகம் தற்காலத்தில் இயல்பாக இருந்து வருகிறது. செல்லத்தைப் பண்ணிக்கொள்ளும் விஷயத்தில் நாங்களும் ரொம்ப தூரம் யோசனை செய்தோம்.

பெண்ணைப் பார்த்து விட்டு வரத் துரைச்சாவை அழைத்துக்கொண்டு வெற்றிலை பாக்கு, பூ, பழத்துடன் நானும் என் சம்சாரமும் போனேம். செல்லத்தின் தகப்பனர் வீடு மாம்பலத்தில் இருந்தது. அவர் ஒரு ரிடையர்ட் டிபுடி கலெக்டர். ஒரு வருஷத்திற்கு முன் பென்ஷன் வாங்கிக்கொண்டு மாம்பலத்தில் முப்பதினுயிரம் ரூபாய்க்கு ஒரு பங்களாவை வாங்கிக்கொண்டு வெள்ளைக்கார மோஸ்தரில் வசித்துவருவதாகக் கேள்விப்பட்டிருந்தோம். வீட்டிலுங்கூட எப்பொழுதும் நிஜார் போட்டுக் கொண்டுதான்

இருப்பாராம். மேஜைமுன் உட்கார்ந்து 'ஸ்பூனுல்'தான் சாப்பிடுகிறது என்று கேள்விப்பட்டோம். பார்க்கப் போனுல் இவைகளிலெல்லாம் என்ன பிசகு இருக்கிறது? ஒரு பிசகையும் காணேம். இருந்தாலும் நம்முடைய பழக்க வழக்கங்களை யெல்லாம் விட்டுப் பெரிய நாகரிக மென்று ஒருவிதப் பிரயோஜனமும் மேன்மையும் இல்லாத புது வழக்கங்களை ஒருவன் மேற்கொண்டால் கொஞ்சம் புத்திக் கோணல் மாதிரி நமக்கும் படுகிறதோ இல்லையோ?

'இவைகளெல்லாம் ஏதுக்கு? சுகமா? சுகாதாரமா? இவைகளால் பெருமை ஏதாவது உண்டா?' என்று தன்னையே கேட்டுக்கொள்ளும்படியான பகுத்தறிவும், விவேகமும் இல்லாமையைத்தான் குறிக்கிறது என்று நினைக்கும்படியாக இல்லையா?

ரிக்ஷா வண்டிகளில் ஏறிக்கொண்டு செல்லத்தின் தகப்பனுர் பங்களாவுக்குப் போனேம். பங்களாவின் முன்புறத்தில் அழகான ஒரு சிறிய தோட்டம் இருந்தது. அதில் ஒரு செடியாவது பூவாவது உபயோகப்படக் கூடியதாக இல்லை. கண்ணுக்கு மாத்திரம் அழகு ஏற்பட்டுவிட்டால் தோட்டம் ரமணீயமாய்விடுமா? கண், மூக்கு இரண்டிற்கும் மனேஹரமாகத் தோட்டத்தை அமைக்கக்கூடாதா? அது 'பாஷ'னில் இல்லை.

பங்காளாவிற்குள் நுழைந்ததும் முதல் ஒரு ஹால் இருந்தது. அது முழுதும் ரத்தினக் கம்பளங்கள் பரப்பியிருந்தது. நடுவில் ஒரு வட்ட மேஜை போட்டு, அதன் மேல் நம் வீடுகளில் ஆனையடி என்பார்களே, அது மாதிரி ஒரு பித்தளைப் பாத்திரம் பளபள வென்று தேய்த்து அழகுக்காக வைக்கப் பட்டிருந்தது. அதற்கு முன்னுல் நாலு காலையும் வாலையும் நீட்டிப் பரப்பின ஒரு புலித் தோல் தரையில் பரப்பியிருந்தது. ஹாலின் ஒவ்வொரு

மூலையிலும் ஒவ்வொரு சின்ன நூக்க மர டீபாய். அவை களில் ஒன்றின்மேல் பித்தளையால் செய்யப்பட்ட பாம்பு, தேள், ஓணான், நட்டுவாய்க்காலி, எலி, மூஞ்சூறு இவை கள் வெகு நேர்மையாகப் பரப்பப்பட் டிருந்தன. மற்ருெரு டீபாயின்பேரில் பளபளவென்று துடைக்கப்பட்ட புளியங் கொட்டைக் குவியல், அதற்கடுத்தபடி சிறு சிறு சோழி கள், மகிழங்கொட்டை, சபோடாப் பழவிதை - இந்தக் குவியல்கள் விசித்திரமாக வைக்கப்பட்டிருந்தன. இம்மா திரி ஒவ்வொரு மூலையிலும் அலங்காரம். 'பாஷன்' வாழ்க் கை நடத்துகிறவர்களுடைய வீட்டின் முன்பக்கம் பூராவும் மியூஸியமாக இருக்கவேண்டு மென்கிற சம்பிரதாயத்தை எவ்வளவோ கஷ்டப்பட்டுக் கற்று நம்முடைய தாக்கிக் கொண்டிருக்கிருேம். அதற்கு ஒத்தாற்போல் செல்லத்தின் தகப்பனர் வீடும் இருந்தது.

நாங்கள் உள்ளே நுழையும்பொழுது செல்லத்தின் தகப்பனர் 'பிஜாமா' போட்டுக்கொண்டு ஒரு மெத்தை தைத்த நாற்காலியின்மேல் உட்கார்ந்திருந்தார். செல்லம் கண்ணில் படவில்லை. செல்லத்தின் தாய் என் சம்சாரத்தை, "வாருங்கோ" என்று வரவேற்று உள்ளே அழைத்துக்கொண்டு போனள். அவளைப் பார்த்ததும் செல்லமும் இந்த மாதிரிதான் இருப்பாளோ என்று எங்க ளுக்குக் கொஞ்சம் அசிரத்தை தட்டியது. செல்லத்தின் தகப்பனர் ஒல்லியாயும், அழகாகவும் தென்பட்டார். அவருடைய சம்சாரமோ அதற்கு நேர் எதிரிடையாக இருந்தாள். பருமனென்ருலும் இவ்வளவு அவ்வளவு பருமனென்று சொல்ல முடியாது. வயசு நாற்பது இருக்க லாம். முகத்தில் ஒருவிதமான அழகு இருந்தது. ஆனல் அந்தப் பருமனிலும், சதை பருத்து உப்பிக்கிடந்த தீரடைகளிலும் அந்த அழகு எடுபடவில்லை. வைர நகை கள் போட்டுக் கொண்டிருந்தாள். ஜரிகை போட்ட

பட்டுக் கரைப் புடைவையை ஜாதிக்குரிய மாதிரியே கட்டிக் கொண்டிருந்தாள். மூக்குக் கண்ணுடியும், தலையில் 'பாஷனு'க்கு ஒத்தபடி வட்டரூபமாய்ச் செருகப் பட்டிருந்த சிவப்புப் பூவுமே அவளுடைய நாகரிகத் தைக் குறிப்பிட்டன.

நாற்பது வயசான பெண்மணி இம்மாதிரி அலங்கா ரம் செய்து கொண்டாளானுல் நம்மை அறியாமல், "ஐயோ வேஷமே!", "ஐயோ அசடே!" என்று நினைத் துக் கொள்ளும்படியாக அல்லவா தோன்றுகிறது?

# 3

## செல்லத்தின் சங்கீதம்

நானும் துரைச்சாவும் செல்லத்தின் தகப்பனுரும் ஹாலில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தோம். செல்லத்தின் தாயும், என் சம்சாரமும், செல்லமும் அதற்குப் பின்புறம் இருந்த அறையில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார் கள். செல்லத்தின் தகப்பனுர், "செல்லம்!" என்று கூப்பிட்டுக்கொண்டே உள்ளே எழுந்து போனுர். ஏதோ அவளிடத்தில் சொன்னுர்.

"இப்பொழுது தீர்த்தம் கொடுத்தால்கூடச் சாப்பிட மாட்டார்கள், அப்பா" என்று பதில் சொன்னது காதில் விழுந்தது.

"அது என்ன சாஸ்திரமடி, அசட்டுச் சாஸ்திரம்! அதெல்லாம் ஹைதர் காலத்துச் சங்கதி" என்ருர் தகப்ப னுர்.

"நீங்கள் தாம் எல்லாவற்றையும் விட்டவர்கள். எல்லாருமே அப்படி இருப்பார்களா?" என்ருள் செல்லம்.

"சாஸ்திரம் கிடக்கிறது, கொண்டாடி" என்று சொல்லிவிட்டுத் தகப்பனார் மறுபடி வந்து எங்களுடன் பேசிக்கொண்டிருந்தார்.

கொஞ்ச நேரத்திற் கெல்லாம் செல்லம் வெள்ளிக் கூஜாவில் தீர்த்தத்தையும் ஒரு வெள்ளித் தட்டில் பலகாரங்களையும் எடுத்துக்கொண்டு வந்து, ஒரு டீபாயின் மேல் வைத்து, டீபாயோடு எங்கள்முன் கொண்டுவந்து வைத்தாள்.

"கொஞ்சம் டிபன் சாப்பிடுங்கோ" என்றார் தகப்பனார்.

"வந்திருக்கிற விஷயத்தை உத்தேசித்து அம்மாதிரி சாப்பிடக்கூடா தென்பார்களே! அதற்கு விரோதமாக என்னத்திற்கு?" என்று நாஸூக்காய்ச் சொன்னேன்.

"அதென்ன சாஸ்திரம் ஸார்? ஆயிரத்துத் தொளா யிரத்து நாற்பத்திரண்டில் கூடவா அந்தச் சாஸ்திரம் செலாவணியில் இருக்கிறது?" என்று சிரித்தார் அவர்.

"சாஸ்திரம் சம்பிரதாயம் என்பது எல்லாக் காலத் திற்குந் தானே ஏற்பட்டது? இருக்கட்டும். ஈசுவர சங்கல்பம் இருந்து நாம் நினைக்கிற பந்துத்வம் நமக்குள் ஏற்பட்டதானால் பரஸ்பர உபசாரம் இன்னும் எவ்வள வோ பின்னால் இருக்கவே இருக்கிறது?" என்று சொல்லி நாங்கள் அவைகளை உண்ணவில்லை.

"சரி, அவைகளை உள்ளே எடுத்துக்கொண்டு போய் விடு, செல்லம்" என்றார் தகப்பனார். அவைகளை எடுத் துக்கொண்டு போகும்பொழுது, செல்லம் தகப்பனாரைப் பார்த்து, "நான் சொன்னேனே பார்த்தீர்களா?" என்று சொல்லுகிற மாதிரி பரிகாசமாய்ச் சிரித்துவிட்டுப் போனாள்.

இதுவரையில் செல்லம் ஹாலிலே தான் நின்றுகொண் டிருந்தாள். அவளும் துறைச்சாவும் ஒருவரை ஒருவர்

நன்றாகப் பார்த்துக்கொண்டார்கள் என்று சொல்லவும் வேண்டுமோ? செல்லம் நல்ல அழகு வாய்ந்த பெண். ஒவ்வோர் அவயமும் மிக அழகாகவும் வசீகரமாகவும் இருந்தது. வயசு பதினேழு பதினெட்டிருக்கும். நல்ல சிவப்பு. ரொம்ப ஒல்லியும் இல்லை; பருமனும் இல்லை. சரியான உயரம். ரூபம் எல்லாவிதத்திலும் ரொம்பவும் திருப்திகரமாக இருந்தது. துரைச்சாவும் ரொம்ப அழகாயிருப்பான். இருவரும் சரியான ஜோடிதான் என்று நினைத்துக்கொண்டேன்.

மற்றும் சிறிது நேரத்திற்கெல்லாம், "செல்லம், இங்கே வா" என்று அவள் தகப்பனர் கூப்பிட்டார். செல்லம் வந்தாள். "இப்படி வா. இங்கே உட்கார்" என்று அவர் தம் பக்கத்திலிருந்த ஒரு மெத்தை தைத்த நாற்காலியைக் காண்பித்தார். அதைக் கேட்க என்னை அறியாமல் எனக்கே வெட்கமாயிருந்தது. பெண்ணைக் கூப்பிட்டு என்னை நமஸ்காரம் செய்யச் சொல்லுவாரென்று நான் எதிர்பார்த்திருந்தேன். எங்கள் முன்னே நாற்காலியில் உட்கார வைத்துக்கொள்ளுகிறது என்றால்!

துரைச்சாவிற்கு இதற்குமுன் ஒரு பெண்ணைப் பார்க்கப் போயிருந்தோம். அந்தப் பெண் எஸ். எஸ். எல். ஸி. வரைக்குந்தான் படித்திருந்தாள். ஆனல் அவளுடைய பெற்றோருடைய பெருமை யெல்லாம், அவள் ரொம்ப அழகாக நாட்டியமாடி அபிநயம் பிடிப்பாள் என்பதே.

"ரொம்ப சிரமப்பட்டு இவளுக்கு நாட்டியம் சொல்லி வைத்திருக்கிறேன், ஸார்! இதில் இவளுக்கு ஆறுவருஷம் 'ட்ரெய்னிங்'. நாட்டியம் என்றால் கையையும் காலையும் ஆட்டிக்கொண்டு ஸினிமாக்களில் குதிக்கிறார்களே. அந்த மாதிரி என்று பார்க்கிறீர்களா? சரியான பரத நாட்டியம் ஸார்! என்று அவள் தகப்பனருக்குப் பெருமை சொல்லிச் சொல்லி மாளவில்லை. அந்தப் பெண்ணையும்

கூப்பிட்டு, "கொஞ்சம் நாட்டியம் ஆடிக் காண்பி அம்மா" என்றார். அந்தப்பெண் வெட்கப்பட்டுக்கொண்டு, "மாட்டவே மாட்டேன்" என்று போய் ஒளிந்துகொண்டு விட்டது. அவள் தாய் அவள்பேரில் சிடுசிடு வென்று விழுந்து, "என்னத்துக்கடீ இவ்வளவு பணத்தைச் செலவழித்து உனக்குச் சொல்லி வைத்தது? முரட்டுப் பிணமே! போய் ஏதாவது ஒன்றை ஆடிவிட்டு வாடீ!" என்று உள்ளே போய்க் குசுகுசுவென்று கண்டித்தாள்.

"என்னத்தை ஆடுகிறதாம்?" என்று அந்தப் பெண் மூஞ்சியைக் கடுத்துக்கொண்டு முணுமுணுத்தது.

"என்னத்தை ஆடுகிறதென்ன? 'தெருவில் வாரானோ' என்றதை அபிநயம் பிடியேன்" என்று சமாதானப்படுத்தி அனுப்பினாள்.

அந்தப் பெண் கஜ்ஜையைக் கட்டிக்கொண்டு வந்து ஆடிற்று. அடித்துக்கொள்ள இரண்டு கை போதா. பெண் சிவப்பாயும், வளர்த்தியாயுந்தான் இருந்தது. ஆனால் ஒன்றரைக் கண்; கும்பகோணத்தைப் பாரென்றால் கோயமுத்தூரைப் பார்க்கும். இந்தக் கண் அழகிற்கு அபிநயம் கற்றுக்கொடுத்தார்களாம்!

'தெருவில் வாரானோ' என்பதை அபிநயம் பிடித்ததோடு அவள் தகப்பனாரின் பெருமை திருப்தியடையவில்லை. "'சங்கடமான சமயலை விட்டு ஸங்கீதம் பாடப் போறேன்' அபிநயம் பிடி!" என்றார். 'சங்கடமான சமையலை விட்டு' என்ற ஒன்றுக்கே, அதை ஒவ்வொருதரமும் பாடிக்கொண்டு கற்பனையாக விதம் விதமாக அபிநயம் பிடித்தது. குந்திக்கொண்டு அம்மிமுன் உட்கார்ந்து மிளகாய் அரைக்கிறமாதிரி, அடுப்பின் மேலுள்ள சாதத்தைக் கிளறுகிற மாதிரி, அரிவாள்மனைமுன் உட்கார்ந்து கீரை நறுக்குகிற மாதிரி, எதையோ விண்டு விண்டு அடுப்பில் கொதிக்கும் பண்டத்தில் போடுகிறமாதிரி ('சாம்பாரில்

பெருங்காயத்தை விண்டு போடுகிற பாவனை, ஸார்" என்று அவள் தகப்பனார் எனக்கு அப்போது விளக்கினார்), சாதம் வடிக்கிற மாதிரி, கரித்தவலையைத் தேய்க்கிற மாதிரி - இவ்விதமாகக் கற்பனை அபிநயங்கள் ஒன்றன்பின் ஒன்றாகக் கிளம்பிக்கொண்டே இருந்தன. அப்புறம் 'ஸங்கீதம் பாடப் போறேன்' என்ற இடத்தில் தம்பூரா மீட்டுகிறமாதிரி, ஆர்மோனியம்போடுகிற மாதிரி, துடையில் தாளம் போடுகிறமாதிரி எத்தனையோ பிடிகள்! கடைசியில் துரைச்சாவுக்கு அந்தப் பெண் நிச்சயமாக வில்லை.

"எங்கே பெண் பார்க்கப் போனாலும், இந்த நாட்டியமல்லவா முன்வந்து நிற்கிறது?" என்றாள் என் சம்சாரம்.

"நாட்டியம் ஆடாத பெண்ணைப் பார்த்துக் கல்யாணம் பண்ண வேணுமென்று நீ முயன்றால் தற்கால நிலைமையில் ஒரு பெண்கூட உனக்கு அகப்படப்போவதில்லை. அறுபது வயசுச் சிறுமி முதல், மூன்று வயசுக் குழந்தை வரையில் இந்தக் காலத்தில் நாட்டியம் கற்றுக்கொண்டு ஆடாமல் உன்னைத்தவிர வேறு ஒருவரும் இருக்கமாட்டார்கள். நீயும் கற்றுக்கொண்டு விடு. அதில் மாசம் ஆயிரம் ரூபாய் இருக்கிறது" என்றேன்.

எதற்காக இதைச் சொல்ல வந்தேனென்றால், அந்தப் பெண்கூட முன்னே வந்து என்னை நமஸ்காரம் பண்ணிற்று. நாட்டியம் ஆடும்பொழுது தவிர மற்றச் சமயங்களில் வெட்கப் பட்டுக்கொண்டு உள்ளேயே புகுந்திருந்தது. செல்லத்தைக் கூப்பிட்டு அவள் தகப்பனார் பக்கத்தில் உட்கார வைத்துக்கொள்வதென்பது அதுவரையில் நான் எங்கும் பார்க்காத காட்சி. எனக்கே வெட்கமாயிருந்தது. மாட்டுப்பெண் மாமனாருடன் சரி சமானமாய் நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு நாலு பேராய்ச்

சம்பாஷணை பண்ணிக் கொண்டிருக்கிற தென்றால் அப்புறம் என்னதான் மரியாதை? ஆனால் செல்லம் உட்காரவில்லை. நாற்காலிக்குப் பின்னால் அதைப் பிடித்துக் கொண்டு நின்றுகொண்டிருந்தாள்.

"வீணையை எடுத்துக்கொண்டு வந்து வாசியேன், செல்லம்" என்றார் தகப்பனார். செல்லம் பாடிக்கொண்டே வீணை வாசித்தாள். ரொம்பவும் உயர்தரமான சங்கீதமாயிருந்தது. வெகு இனிமையும் வசீகரமுமான குரல். வீணை வாசிப்பும் குளுமையாகவும், மாதுரியமாகவும், ஞானத்தோடு கூடியதாகவும் இருந்தது. அந்தச் சங்கீதத்தைக் கேட்டே துரைச்சா மோகத்தில் மூழ்கிவிட்டானென்று நன்றாய்த் தெரிந்தது. துரைச்சாவுக்குக் கொஞ்சம் சங்கீதப் பைத்தியம் உண்டு. ஈசுவரன், பாவம், சாரீரத்தைத்தான் கொடுக்கவில்லை! இருக்கிற சாரீரத்தை வைத்துக்கொண்டு காலையில் எழுந்திருந்தது முதல் இரவு படுக்கும்வரையில் எதையாவது ஊளையிட்டுக்கொண்டே இருப்பான்.

"போதுமடா கத்தல்!" என்றால்கூட நிறுத்தமாட்டான். நடக்கிற கச்சேரிகளில் ஒன்று பாக்கிவிடமாட்டான். நல்ல ஞானம் இருக்கிறது. சாரீரந்தான் இல்லை. பாவம்!

"செல்லம் ரேடியோவில் வாசிக்கிறது உண்டோ, இல்லையோ?" என்று கேட்டேன்.

"இல்லை" என்றார்.

"அது ஏன் அப்படி? ரேடியோக்காரர்கள் 'சான்ஸ்' கொடுக்கவில்லையா? இவ்வளவு மேன்மையான சங்கீதம் ரேடியோவில் கேட்கக் கிடைக்கிறதில்லையே" என்றேன்.

செல்லம் ரேடியோவில் பாடுகிறதில்லை என்றது எனக்கு ரொம்பவும் ஆச்சரியமாகவே இருந்தது. இரண்டு வர்ணம், நான்கு கீர்த்தனைகள் கற்றுக்கொண்டுவிட்டால்

ரேடியோவில் பாட 'ஆடிஷன்' கொடுக்கப் போகிறதும், ரேடியோக்காரர்கள் ஒப்புக்கொள்ளாவிட்டால், "ரேடியோவிலேயே ஞானமுள்ளவர்கள் கிடையாது" என்று திட்டுகிறதும் ரொம்பவும் ஸகஜமாய்த் தினம் கேட்டுக்கொண்டிருக்கிறோமே! பெரிய கச்சேரி செய்ய யோக்கியதையுள்ள செல்லம் அங்கே பாடுகிறதில்லை என்றால் ஆச்சரியமாகத்தான் இருந்தது.

"ரேடியோக்காரர்களால் தடை ஒன்றும் இல்லை. இவள் அங்கே போய்ப் பாட ஒப்புக்கொள்ளவில்லை. 'பாட்டுத் தெரிந்தால் ரேடியோவில் பாடுகிறது, கச்சேரி செய்கிறது என்றால்தான் சங்கீதம் தெரிந்தாற் போல் ஆச்சோ?' என்று வேதாந்தம் பேசுகிறாள். எல்லாம் இவளுடைய தாத்தாவின் போதனை."

"தாத்தா என்றால் யார்? உங்கள் தகப்பனாரா?"

"இல்லை. என் மாமனார். இரண்டு வருஷங்களுக்கு முன் இறந்துபோய்விட்டார். பெண்கள் படிப்பு, அவர்கள் நடந்துகொள்ள வேண்டிய மாதிரி இவைகளிலெல்லாம் அவர் கொள்கைகள் பழங் காலத்தவை. செல்லத்துக்கும் அந்தப் படிப்பை ஏற்றியிருக்கிறார்."

"அப்படியானால் செல்லத்தை இவ்வளவு தூரம் படிக்கும்படியாக எப்படி விட்டார்?"

"பெண்களெல்லாம் வேண்டியவரையில் கல்வி கற்க வேண்டியதுதானாம். ஆனால் அதை அவர்கள் உத்தியோகம் செய்ய, பணம் ஸம்பாதிக்க - இவைகளுக்காக உபயோகப்படுத்தக் கூடாதாம். ஏதோ தகவல் இல்லாத வேதாந்தம். அதைத்தான் செல்லமும் பிடித்துக்கொண்டிருக்கிறாள்" என்றார்.

படித்த பெண்ணாயிருந்தாலும் புத்திக் கோணல் இல்லையென்று தெரிகிறது என்று எனக்குள் நினைத்துக் கொண்டேன்.

# 4

## அவரவர் அபிப்பிராயம்

செல்லத்தின் தகப்பனர் எங்களே அவருடைய காரிலேயே வீட்டுக்குத் திருப்பி அனுப்பினர். கார் கிளம்பி நாலு புரள் புரண்டவுடனே, "அது என்ன, அந்த வீட்டில்..." என்று என் ஸம்சாரம் எதையோ சொல்ல ஆரம்பித்தாள். "டிரைவர் உட்கார்ந்து கொண்டிருக்கிறுன். இப்பொழுது ஒன்றும் பேசாதே. எல்லாம் வீட்டுக்குப் போய்ப் பேசிக் கொள்ளலாம்" என்கிற மாதிரி அவளுக்கு நான் ஜாடை காண்பித்தேன். "நீங்கள் சொல்வது சரிதான். மறந்து போய்விட்டேன்" என்று திடீரென்று ஞானோதயம் அடைந்தவள்போல் எனக்குத் திருப்பி ஜாடை காண்பித்தாள். அப்புறம் நாங்கள் ஒன்றும் பேசவில்லே. ஏதோ வேலே இருக்கிறதாகத் துரைச்சா பாதி வழியில் இறங்கி விட்டான். நானும் என் ஸம்சாரமும் வீடு வந்துசேர்ந்தோம்.

உள்ளே நுழைந்ததும், "என்னடி உன் அபிப்பிராயம்?" என்றேன்.

"சற்று இருங்கோ, இதோ வந்துவிட்டேன். இந்தப் புடைவையை அவிழ்த்துப் போட்டுவிட்டு வேறு புடைவையைக் கட்டிக்கொண்டு வருகிறேன்" என்று சொல்லிக் கொண்டே அவள் அவசரமாகக் கொல்லேப்பக்கம் போய் விட்டாள். விரைவிலேயே பழம் புடைவையைக் கட்டிக் கொண்டு, பெண்ணேப் பார்க்கக் கட்டிக்கொண்டு போன புடைவையை உள்ளே வைப்பதற்குக் கொசுவிக் கொண்டே வந்துசேர்ந்தாள்.

"உன் அபிப்பிராயம் என்னடி?"

"உங்கள் அபிப்பிராயம் என்ன?"

"உன்னுடையதை முன்னே சொல்லேன். அப்புறம் நான் சொல்லுகிறேன்."

"உங்களுடையதை முன்னே சொல்லுங்கள்."

"என் அபிப்பிராயத்தைப்பற்றி என்ன? மாட்டுப் பெண்ணை வைத்துக்கொண்டு குடித்தனம் பண்ணப் போகிறவள் நீயல்லவா!"

"அப்பொழுது நீங்கள் மாத்திரம் வீட்டை விட்டு வேறு வீட்டிற்குப் போயிருக்கப் போகிறீர்களா? நீங்களுந்தானே வைத்துக்கொண்டு குடித்தனம் பண்ண வேண்டும்?"

"நீயும் பண்ணப் போகிறதில்லே; நானும் பண்ணப் போகிறதில்லே. வைத்துக்கொண்டு குடித்தனம் பண்ணப் போகிறவன் துரைச்சா. அது இருக்கட்டும். பெண் எப்படி என்று உனக்குப் படுகிறது?"

"குற்றமில்லே என்றுதான் எனக்குப் படுகிறது. கண்ணுக்கு லக்ஷணமாயிருக்கு. துரைச்சாவுக்குச் சரியான ஈடுதான். அதைப் பார்த்தால் படிச்ச பெண் என்று கருவமாய்க் கிருவமாய் இருக்கிறுப்போலே படவில்லே. எல்லாரையும்போல் சாதாரணமாய்த்தான் இருக்கிறது."

"உன்னே வந்து நமஸ்காரம் பண்ணிற்று?"

"இல்லே. அவள் அம்மாவும், பண்ணுடி என்று சொல்லவில்லே. அதுவும் பண்ணவில்லே."

"படிப்பு தலேப்பட்ட பிறகு நமஸ்காரம் என்பது அற்றுப்போய் விட்டது. இருக்கட்டும். அவள் அம்மா எப்படி? என்ன பேசினுள்?"

"வாருங்கோ என்று என்னே உள்ளே அழைத்துக் கொண்டு போனுள். ஒரு பெரிய அறைக்குள் போனேும். அதுவும் ஒரு ஹால் மாதிரிதான் இருந்தது. கீழெல்லாம்

ரத்தின கம்பளம் விரித்திருந்தது. உட்காருவதற்கு இரண்டு மூன்று ஸோபாக்கள், மெத்தை தைத்த நாற்காலிகளில் நாலைந்து அங்கே போட்டிருந்தன. இதைக் கேட்டீர்களா: அந்த அம்மா, வீட்டிற்குள்ளேயே செருப்புப் போட்டுக்கொண்டுதான் நடக்கிருள்!"

"காலில் ஏதாவது வெடிப்போ என்னவோ! அந்தஸ்தும் நாகரிகமும் உள்ளவர்கள் அப்படித்தான் இருப்பார்களடி! இல்லாவிட்டால் உன்னைப்போல் நாட்டுப்புறம் மாதிரி இருப்பார்கள் என்று நினைக்கிருயோ? 'செருப்பு வாங்கிக் கொடுக்கிறேன். போட்டுக்கொள்' என்று நானுந்தான் உன்னிடத்தில் தினம்சொல்லிக்கொண்டிருக்கிறேன். நீ கேட்கவில்லை. அவமானப்பட வேண்டியதுதான்."

"என்ன அவமானமாம்?"

"உன் சம்பந்தி செருப்புப் போட்டுக்கொண்டு நடக்க, நீ நாட்டுப்புறம் மாதிரி வெறுங் காலோடிருந்தால்?"

"இருந்தால் இருக்கிறேன் போங்கோ. எனக்கு அந்த 'பாஷன்' வேண்டாம்."

"அந்தப் பெண்ணும் செருப்புப் போட்டுக்கொண்டு தான் வீட்டிற்குள் நடக்கிறதோ?"

"அதன் காலில் செருப்பைக் காணும்."

"கிடக்கிறது, மேலே சொல்லு."

"அந்த ஹாலுக்குள் போனதே ஒரு 'குஷன்' நாற்காலியைக் காண்பித்து உட்காரச் சொன்னுள். அந்தப் பெண் வந்து, எலக்ட்ரிக் விசிறியைப் போட்டது..."

"ஹஊ ஹஊஉஉ! நீ ஜோராய், 'பானின்' கீழ் மெத்தை தைத்த நாற்காலியில் உட்கார்ந்துகொண்டாய். காலைத் தொங்கப் போட்டுக்கொண்டு உட்கார்ந்துகொண்டாயா? மேலே தூக்கி வைத்துக்கொண்டு உட்கார்ந்தாயா?"

"என்னை ஒன்றும் தெரியாத நாட்டுப்புறம் என்று நினைத்துவிட்டீர்களா, என்ன ?"

"சே! சே! நீயா நாட்டுப்புறம்? நீ இருக்கிற மாம்பலம் நாட்டுப்புறமா? நாகரிகத்தில் முதிர்ந்த பட்டணமல்லவா? நீ பிறந்த உங்கள் அப்பாவீட்டிலேயும் மெத்தை தைத்த நாற்காலி இல்லை. நீ வாழ்க்கைப்பட்ட உன் புருஷன் வீட்டிலேயும் இல்லையே என்று சொன்னேன். அந்தப் பெண்ணும் ஒரு 'குஷன்' நாற்காலியில் உட்கார்ந்ததோ?"

"இல்லை. நின்றுகொண்டுதான் இருந்தது. 'உட்கார்ந்துக்கோயேண்டி அம்மா' என்றேன். போய்ப் பூநாலையும் ஊசியையும் எடுத்துக்கொண்டு வந்து, கீழே கம்பளியில் முட்டி போட்டுக்கொண்டு உட்கார்ந்து பூப்போட்டுக் கொண்டிருந்தது."

"அப்புறம் அந்த அம்மாள் என்ன சொன்னாள்?"

"அந்தப் பெண் 'இண்டர்' பாஸ் பண்ணிற்றாம்; அப்புறம் படிப்பை நிறுத்திவிட்டார்களாம். அந்தப் பெண்ணின் தகப்பனாருக்கு மாத்திரம் அதில் ரொம்ப அதிருப்தியாம். பி. எஸ். ஸியோ என்னமோவாமே, அதற்குப் படிக்கச் சொன்னாராம். இல்லாவிட்டால் டாக்டர் பரீக்ஷைக்குப் படி என்றாராம். அந்த அம்மாவுக்கு அப்பா வந்து, 'அதெல்லாம் கூடாது, படித்தது போதும்; ஒரு நல்ல பிள்ளையாய்ப் பார்த்து முன்னடி கல்யாணம் செய்து கொடுத்து மறு வேலையைப் பாருங்கள்' என்றாராம்; படிப்பை நிறுத்துவிட்டார்களாம். பெண்ணின் அப்பாவுக்கு மேலே அவள் படிக்கவேண்டும் என்ற எண்ணமாம். அந்தப் பெண், தாத்தா பேச்சைக் கேட்டுக்கொண்டு மாட்டேனென்று சொல்லிவிட்டதாம்."

"பெண்ணுக்கு என்ன நகை போட்டிருக்கிறார்கள்?"

"விசேஷமாய் ஒன்றும் இல்லை. காதில் ஒரு சிவப்புக் கல் தோடு போட்டுக் கொண்டிருக்கிறது..."

"சிவப்புக் கல் தோடா?"

"ஆமாம். அவள் அப்பா வைரத்தில் வாங்கிக் கொடுக்கிறதாகச் சொன்னாராம். அந்தப் பெண் சிவப்புக் கல் தோடுதான் வேண்டுமென்றதாம். வாங்கிப் போட்டிருக்கிறார்கள். ஆனால் தோடு ரொம்ப நன்றாயிருக்கிறது; முந்நூறு நானூறு ரூபாய் இருக்கும் என்று நினைக்கிறேன்."

"இப்பொழுதெல்லாம் உடம்பு நிறத்துக்கு ஒத்தாப் போல் புடைவை, ஜாக்கெட்டு, கை வளைகள், இதர நகைகள் போட்டுக்கொள்ளுகிறது என்கிற 'பாஷ'னில் ஆரம்பித்திருக்கிறார்களே, அதில் சேர்ந்ததா யிருக்கும். இல்லாவிட்டால் பெண்ணுக்கு வைரத் தோடு வாங்கிப் போட அப்பாவிடத்தில் பணம் இல்லையா? மறந்துவிட்டேனே! அந்தப்பெண் இரண்டு கைகளிலும் வளையல்கள் போட்டுக் கொண்டிருந்ததா? ஒரு கையில் வளையல்களும் மற்றொரு கை மொட்டையாகவும் இருந்ததா? அதுதான் இப்போது 'பாஷன்' என்று நீ சொல்லிக்கொண் டிருப்பாயே?"

"ஏன்? நீங்கள் பார்க்கவில்லையா என்ன? இரண்டு கையிலுந்தான் போட்டுக்கொண்டிருந்தது. அந்தப் பெண்ணைப் பார்த்தால் அவ்வளவு 'பாஷ'னாய்க் காணோம். 'பாஷ'னெல்லாம் அம்மா தான்!"

"அம்மா என்ன 'பாஷன்'?"

"இத்தனை வயசாய், 'பிரிண்டு வாயில்' புடைவை கட்டிக் கொள்ளுகிறதும், தலையிலே சின்னப் பெண்கள் மாதிரி சிவப்புப் பூவையும் நீலப் பூவையும் வளைத்து வைத்துக் கொள்ளுகிறதும், ஏதோ வேஷம் கட்டிக் கொண்டிருக்கிற மாதிரிதான் இருக்கிறது. அந்தப் பெண்

'பிரிண்டு வாயில்' தான் கட்டிக்கொண்டிருந்தது. அது சிறிசு. நன்ருகவும் இருந்தது."

"இப்பொழுதெல்லாம் பெண்களைவிட அம்மாமார்கள் தாண்டி நாகரிகம் அதிகம்? அப்புறம் அவள் அம்மா இன்னும் என்ன சொன்னுள்? கல்யாணத்தில் இவ்வளவுக்குச் செய்யப் போகிருேம் என்று ஏதாவது சொன்னுளோ?"

"அதையெல்லாம் ஒன்றும் சொல்லவில்லை. அந்தப் பெண்ணின் பேரில் அவள் அப்பா இருபதினுயிரம் ரூபாய் எழுதிவைத்திருக்கிருராம்."

"இன்னும் என்னவாம்? கல்யாணத்தையும் நன்ருய்த் தான் செய்வார்கள். பெண் உனக்குப் பிடித்துவிட்டது?"

"எனக்குப் பிடித்துத்தான் இருக்கிறது. உங்களுக்கு?"

"எனக்கும் பிடித்துத்தான் இருக்கிறது, ரிடையர்டு டிபுடி கலெக்டர் பெண். சொல்லிக் கொள்வதற்கும் கெளரவமாயிருக்கிறது. ஏராளமான சொத்தோடு வருகிறது. பெண் கண்ணுக்கு லக்ஷணமாய் யிருக்கிறது. 'மிலிடெரி'யா யிருக்கிருப்போல் படவில்லை என்கிருய். எல்லாம் சரியாய்த்தான் இருக்கிறது அவள் அப்பாவைப் பற்றித்தான் யோசனையா யிருக்கிறது."

"என்ன அவள் அப்பாவைப் பற்றி? அவர் பேர் என்ன?"

"ஸாமி ஐயங்காராம்."

"என்ன அவள் அப்பாவைப்பற்றி?"

"அவர் தர்ப்பணம் பண்ணுகிற தில்லையாம். அப்பன் ஆத்தாள் திவசம் பண்ணுகிறதில்லையாம். அவர் பூணூலையே கழற்றி எறிந்துவிட்டாராமே? இப்பொழுது அவருக்குப் பூணூல் கிடையாதாமே. இதெல்லாம் என்ன, 'ஸ்டுபிட் நான்ஸென்ஸ்' என்கிருராம். அர்த்தமில்லா

மல் அனுவசியமாய்ப் பூணூலை ஏதுக்குச் சுமக்கிறது? என்கிறாராம். நடுவில் கொஞ்ச நாள் மீசை வைத்துக் கொண்டிருந்தாராம். ஒரு நாளைக்கு ஒரு பெட்டிச் சுருட்டாம். எல்லாம் வெள்ளைக்காரன் மாதிரி தானும். விவேகம் ரொம்ப முதிர்ந்துவிட்டது. இந்த அநாசாரம் நமக்கு எப்படிச் சரிப்படப் போகிறது என்று யோசனை செய்கிறேன்.''

"என்னவோ நன்றாய் விசாரித்து ஆழ்ந்த யோசனை பண்ணிச் செய்யுங்கள். ஆயிரங் காலத்துப் பயிர். எல்லாவற்றிற்கும் துரைச்சா என்ன சொல்லுகிறானே, அதை யல்லவா முன்னாடி யோசிக்க வேண்டும்?'' என்றாள் என் சம்சாரம்.

பெண்ணைப் பார்த்துவிட்டு வந்ததிலிருந்தே துரைச்சாவின் போக்கு ஏதோ ஒரு மாதிரியாக இருந்தது. எப்பொழுதும் ஊர்திரிந்துகொண்டிருக்கிறவன், இப்பொழுது அறையிலேயே புகுந்துகொண்டு எழுதுகிறதும் கிழித்துப் போடுகிறதுமாக இருந்தான். யாராவது உள்ளேபோனால் எழுதுவதை எடுத்து மறைத்துக்கொள்ளுகிறதும், திருட்டு விழி விழிக்கிறதும் குறிப்பாய்த் தென்பட்டன.

துரைச்சா ஒரு நாளும் இப்படி இருந்ததில்லை. ஏன் இப்படி இருக்கிறான், என்ன விஷயம் என்று எங்களுக்கு ஒன்றும் புரியவில்லை.

## 5

## கடிதப் போக்கு வரத்து

இந்தக் காலத்துப் பிள்ளைகளை என்னவென்று சொல்வது! அசடுகள் என்றால் வடிக்கட்டின அசடுகள். செல்லத்தைப் பார்த்துவிட்டு வந்த பிறகு துரைச்சா போக்கே ஒருமாதிரி யாக இருந்தது என்று சொன்னேனே; விஷயம் என்ன

தெரியுமா? செல்லத்துக்கு இவன் கடிதம் எழுதியிருக்கிறன்; அவளிடத்திலிருந்தும் இவனுக்குப் பதில் வந்திருக்கிறது. எதையோ எடுக்கிறதற்காக இவன் அறைக்குள் போய் டிராயரைத் திறந்தேன்; இவன் எழுதின கடிதத்தின் நகலும் அவள் எழுதிய பதிலும் தற்செயலாய் என் கையில் அகப்பட்டன. நாங்கள் தாம் பெண் பேசிக்கொண்டிருக்கிறேமே; நடுவில் இவன் பெரியதனம் என்ன? அதிலும் அசடு வழியும்படியாகவா?

துரைச்சாவுக்கு அந்தப் பெண்ணைப் பண்ணிக்கொள்ள இஷ்டந்தானே என்று அவனைக்கேட்டுத்தெரிந்து கொள்ளும்படி என் சம்சாரத்தினிடத்தில் சொல்லியிருந்தேன். அவள் அவனைக் கேட்டாளாம். "இன்னும் இரண்டு மூன்று தினங்களுக்குள் சொல்லுகிறேனம்மா" என்று பதில் சொன்னனும். "இரண்டு மூன்று தினங்கள் என்னடா? அதற்குள் என்ன புது யோசனை உனக்குக் கிளம்பப் போகிறது? பெண்ணைத்தான் நீ பார்த்தாச்சே. பெண் பிடித்திருக்கிறது, இல்லை, என்று சொல்லேன். அதைத் தெரிந்துகொண்டுதானே பேச்சு மேலே நடத்த வேணும்? நாளைத் தள்ளிக்கொண்டு போவானேன்? உண்டு இல்லை என்று சீக்கிரம் முடிவு பண்ணிக்கொண்டால், இந்த இடம் சரிப்படாவிட்டால் வேறு இடத்தைப் பார்க்கிறேம்" என்றளாம்.

"இரண்டு மூன்று தினங்களுக்குள்தான் சொல்லுகிறேனென்கிறேனே; அதற்குள் ஏன் அவசரப்படுகிருய் அம்மா?" என்று அவன் பதில் சொன்னனும். "பெண் பிடித்திருக்கிறதா, இல்லையா? அதை முதலில் சொல்லேன்."

"பெண் பிடித்துத்தானம்மா இருக்கிறது. எல்லாவற்றிற்கும் இரண்டுநாள் பொறேன், சொல்லுகிறேன்" என்று இம்மாதிரி சொல்லி வந்தான்.

இரண்டு மூன்று நாள் பொறுப்பது எதற்கு என்று இப்பொழுதல்லவா தெரிய வந்தது? செல்லத்தைக் கண்ணுற்றமாத்திரத்தில் இவனுக்கு அவள்பேரில் காதல் உண்டாய்விட்டதாம். ஆனால் அவளும் இவனைக் காதலித்தால் அன்றி இருவரும் கல்யாணம் செய்துகொள்வது அவிவேகமாம். அதை அவளிடத்திலிருந்து நேர்முகமாக அறிந்து கொள்வதற்காகவே கடிதப்போக்கு வாத்தில் ஆரம்பித்தானும். கடிதம் எழுதி யிருக்கிற அழகைப் பாருங்கள்! புத்தி இப்படியும் புல் மேயப் போகுமா? அதை நினைக்கும்பொழுதே எனக்கு வெட்கம் சூழ்ந்து கொள்ளுகிறது.

"ஸ்ரீமதி செல்லம்மாள் அவர்களுக்கு..." (இவர்களுக்குள் சுதந்திரத்துடன் காதலர் பேச்சில் அழைத்துக்கொள்ளும்படியான உறவு இன்னும் ஏற்படவில்லை யாதலால் மரியாதை தவறாமல் இருப்பதுதான் ஒழுங்குமுறை என்கிற எண்ணத்துடன் எழுதுகிறான்போலும்!)

"இந்தக் கடிதம் எழுதும் யான் இன்றைத்தினம் என் தகப்பனார் தாயாருடன் தங்கள் வீட்டுக்கு வந்திருந்தவன். என் பெயர் துரைசாமி ஐயங்கார்; துரைச்சா என்று வீட்டில் கூப்பிடுகிறது. நம் பெற்றோர்களால் நமக்குள் விவாகம் செய்துவைக்க இப்பொழுது பேச்சு நடந்துகொண்டிராவிட்டால் நான் இந்தக் கடிதத்தைத் தங்களுக்கு எழுதுவது ரொம்பவும் ஒழுங்கீனமாகும். ஆனால் படித்து விவேகம் பொருந்திய தாங்கள், விவாகப் பேச்சு நடக்குங் காலத்தில் இம்மாதிரி கடிதத்தை நான் தங்களுக்கு எழுதுவது தவறாகாது என்று உணர்வீர்கள் என்கிற முழு நம்பிக்கையுடன் இதை எழுதத் துணிந்தேன்.

"விவாகத்துக்கு அடிப்படையாக உள்ளது பரஸ்பரக் காதல். ஒருதலைக் காதல் பயனற்றது; அநேக சமயங்களில் விபரீதத்தையே விளைவிக்கும். இது விஷயமாகத்

தங்களுடைய மனப்பான்மையை அறிய விரும்பியே இந்தக் கடிதத்தை எழுதுகிறேன்.

"என் மனம் சம்பந்தப்பட்ட வரையிலோ, தங்கள் பேரில் எனக்கு ஏற்பட்டிருக்கும் காதலாகிய கடலிலே நான் மூழ்கிக் கிடக்கிறேன். 'கண்டதும் காதல்' என்பது என் காதலுக்குத்தான் முற்றும் பொருந்தும். தாங்கள் எங்களுக்காகப் பக்ஷணங்களை எடுத்துக்கொண்டு ஹாலுக்குள் வந்த அந்த க்ஷணமே மாரன் கணைகளை என் ஹிருதயத்தில் எய்தான். அதுமுதல் என் ஹிருதயம் புண்பட்டுக் கிடக்கிறது. நான் தங்களுடைய நினைவாகவே பசி நித்திரையின்றிக் கிடக்கிறேன்.

"தங்களுடைய சுந்தரமான முகம் ஒரு க்ஷணமும் என்னை விட்டு அகலாமல் என் கண்முன் ஸதா நின்றுகொண்டிருக்கிறது. என் கண்முன் நிற்கும் தங்களுடைய ரூபத்தின் அழகை அவயவ அவயவமாக மனத்தில் நிறுத்தி ஆனந்தஸாகரத்தில் அமிழ்ந்து அனுபவித்துக்கொண்டிருக்கிறேன். தங்களுடைய புருவத்தின் அழகைச் சொல்வதா! சந்திர கிரணங்களைப்போல் குளுமையான பார்வையோடுள்ள தங்களுடைய கண்களின் வசீகரத்தைச் சொல்வதா! குயிலினும் இனிய தங்களுடைய குரலைச் சொல்வதா! தாங்கள் வீணை வாசித்துக்கொண்டு பாடியபோது நான் இந்த லோகத்திலேயே இல்லை. ஏதோ ஓர் ஆனந்த உலகில் தெய்விக கானத்தைக் கேட்டுப் பரவசமடைந்தவன்போல் கிடந்தேன். தாங்கள் என்னைக் காதலிக்கிறீர்களா? 'ஆமாம்' என்கிற வார்த்தை தங்கள் வாயால் வந்ததானால் நான் ஸகல சாம்ராஜ்யங்களையும் பெற்றவனாவேன். நான் அவ்வளவு பாக்கியவந்தனா?

"என்னுடைய மனநிலை எப்படி இருந்தபோதிலும், தாங்கள் என்னைக் காதலிக்காவிட்டால் நான் தங்களை மணம் செய்துகொள்ளச் சிறிதும் நினையேன். அப்படிச்

செய்வது என்னுடைய நலத்தையே கோரிய மிருகத்தன்மை யாகும்.

"தங்கள் வாயால் எனக்கு நல்வார்த்தை கிடைக்கா விட்டால் நான் விவாகம் என்பதை இனி மனத்திலும் நினைக்கப் போவதில்லை. பிரம்மசாரியாகவேதான் இருப்பேன். இது சத்தியம்!

"தாங்கள் என்னைக் காதலிக்கிறீர்களா? என்னை மணக்கத் தங்களுக்குப் பூர்ண சம்மதந்தானா? இப்படிக்கு, - துரைசாமி."

அட ஸெமி கிராக்கே! 'ஸெமி கிராக்' என்பதற்கு வேறு அத்தாக்ஷியும் வேண்டுமா!

இதற்குச் செல்லம் எழுதியிருக்கும் பதிலைப் பாருங்கள்.

அவள் கடிதத்தில் யார் யாருக்கு எழுதியது என்ற பூர்வ பீடிகை ஒன்றும் இல்லை. கடிதம் திடும்பிரவேசமாய் ஆரம்பிக்கப்பட்டிருந்தது.

"தங்கள் கடிதத்தில் கண்ட சங்கதி ஒன்றும் எனக்கு அர்த்தமாகவில்லை. எங்கேயோ நாவலில் இந்த மாதிரி படித்த ஞாபகம் வருகிறது. எந்த நாவலில் என்று ஞாபகம் வரவில்லை. எதிலிருந்து எடுத்து எழுதினீர்களோ? இதற்கு என்ன பதில் எழுதுகிறது என்று எனக்குத் தெரியவில்லை. சிறு பெண் இந்த மாதிரி கடிதத்தை வரப் பெறுகிறதும் அதற்குப் பதில் எழுதுகிறதும் ரொம்பவும் தப்பு என்றும், நிந்தனைக்குட்பட்ட விஷயம் என்றும் தோன்றிற்று. சரியோ, தப்போ பதில் போட்டு வைக்கலாம், மரியாதைக் குறைவாய் நடந்துகொள்வானேன் என்று இதை எழுதுகிறேன்.

"நான் அன்று ஹாலுக்குள் வந்ததும் மாரன் என்று ஒருவன் தங்கள்மேல் கணை விடுத்ததாகவும் அது தங்களுடைய ஹிருதயத்தில் தைத்துக் கிடக்கிறதாகவும் எழுதி

யிருக்கிறீர்கள். மாரன் என்றவன் யாரோ? மாரன் என்ற பேருள்ள பேர்வழி எங்கள் வீட்டில் ஒருவனும் இல்லையே! மேலும் நான் அங்கேயே தானே இருந்தேன்? கணை விடப்பட்டதாகவும் அது தங்கள் ஹிருதயத்தில் தைத்ததாகவும் என்கண்ணில் படவில்லையே! எங்கள் வீட்டுக்கு வந்திருக்கும்பொழுது இம்மாதிரி அகிருத்தியம் தங்களுக்கு நடந்தது என்று கேட்க நான் ரொம்பவும் வருந்துகிறேன். மாரன் என்கிற துஷ்டன் யார் என்று நான்விசாரிக்கிறேன். அவனுக்கு உங்கள் பேரில் என்ன க்ஷாத்திரமா யிருக்கலாம்?

"தங்களுடைய ஹிருதயம் பழுதாய் விட்டிருக்கிறது என்பதைக் கேட்கவும் வருந்துகிறேன். ஹிருதய நோய் மகா கொடியது என்றும், திடீர் என்று ஆபத்தில் முடியும் என்றும் சொல்வார்கள். உடனே நல்ல டாக்டராய்ப் பார்த்து, 'இஞ்ஜெக்ஷன்'களையோ வேறு சிகிச்சை யையோ நீங்கள் செய்துகொள்வது நலம். அந்நியராயிருந் தாலும் யாராயிருந்தாலும் நோய்வாய்ப் பட்டார் என் ருல் அதற்கு நம்மாலான யோசனையைச் சொல்வது தவ றல்ல, இயல்புதான் என்கிற முறையில் என் யோசனையை எழுதினேன். தப்பாய் நினைத்துக்கொள்ளக்கூடாது.

"ஹிருதயப் பழுதோடு நிற்காமல் சித்தமும் சில சமயங்களில் ஸ்வாதீனத்தை இழந்து பழுதுபடுகிற மாதிரி எனக்குப் படுகிறது. அது விஷயமாகவும் தாங்கள் கவனிப் பது நலம். நாட்டு வைத்தியமாய்ச் சொன்னுல், ஒரு மண்ட லம் தலையில் எலுமிச்சம்பழத்தைத் தேய்த்துத் தண்ணீர் கொட்டினுல் போய்விடும் என்று சொல்லுவார்கள். வெள் ளைக்கார முறையில், வீட்டை விட்டு ரெட்ஹில்ஸ் போகும் வழியில் ஒரு கட்டிடத்தில் கொண்டு வைத்துக்கொண்டு சிகிச்சை செய்வார்கள். ஏதாவது ஒரு முறையில் அந்தக் கோளாற்றையும் கவனிப்பது நலம்.

"தங்கள் கடிதத்தில் கண்டிருக்கும் விஷயங்களில் எதற்கு என்ன பதில் எழுதுகிறது என்று எனக்கு ஒன்றும் புரியவில்லை. நன்முய் விளங்குவன இரண்டு கேள்விகள் - நான் தங்களைக் காதலிக்கிறேனு? தங்களைக் கல்யாணம் செய்துகொள்ள எனக்கு விருப்பமா?

"காதலிக்கிறது என்ருல் இன்னது செய்யவேண்டும் என்று எனக்குப் புரியவில்லை. உருவாக எதைச் செய்யச் சொல்லுகிறீர்கள்?

"தங்களை விவாகம் செய்துகொள்ள எனக்கு இதுவரையில் விருப்பம் இருந்ததோ இல்லையோ, அதைப்பற்றி இப்பொழுது பேச்சு அநாவசியம். சித்தம், ஹிருதயம் இரண்டு இடங்களிலும் நோய் கண்டு நோயாளியா யிருக்கிறீர்கள் என்று எனக்குத் தெரிந்த பிறகு தங்கள் கேள்விகளுக்கு என்னிடத்திலிருந்து என்ன பதில் எதிர்பார்க்கிறீர்கள்? - செல்லம்."

இந்தக் கடிதத்தைப் படித்தவுடன் எனக்கு வெகு சந்தோஷம் வந்துவிட்டது.

"சரியான கிண்டல்காரப் பெண். இவளே துரைச்சாவுக்குப் பெண்ஜாதியாய் வாய்த்தால் அவனுக்கு நல்ல வாத்தியார் ஒருத்தி ஏற்பட்டமாதிரி" என்று நினைத்துக் கொண்டேன்.

# 6

## வயசின் சேஷ்டை

என் சம்சாரத்தினிடத்தில் போய், "காதல் என்ருல் என்னவென்று தெரியுமாடி?" என்றேன்.

"எல்லாம் தெரியும்! 'காதல்' அல்ல, 'காதர்' அதைக் காதல் என்றுகூடச் சொல்லுகிறதா என்ன? காதர், 'பீதர்' என்றுதான் சொல்லுவார்கள்.

"ஐயோ அசடே! மாம்பழம் அல்லடி. காதல்!"

"அது என்னவோ எனக்குத் தெரியாது. காதல் என்றால் என்னவாம்?"

"எம். ஏ., பாஸ்பண்ணின துரைச்சா என்று உனக்குச் சமத்தான ஒரு பிள்ளை இருக்கிறானே, அவனைப் போய்க் கேள். அவன்தான் இப்போது காதலைக் கரை கண்டிருக்கிறான். எம். ஏ., பாஸ்பண்ணிவிட்டால் புத்தி வந்துவிட்டது என்று அர்த்தமா? அசடு! அசடு! ஸர்வ அசடு!"

"என்ன சமாசாரம்? சொல்லுங்களேன்."

"சொன்னான், சுரைக்காய்க்கு உப்பு இல்லை என்று! நாம்தான் அந்த டிபுடி கலெக்டர் பெண்ணைப் பண்ணிக் கொள்ளும் விஷயத்தில் பேச்சு வார்த்தை நடத்திக்கொண்டிருக்கிறோமே? இதற்கு நடுவில் இவன் பெரியதனம் என்ன என்கிறேன்? ஒரு சிறு பிள்ளை முன்பின் பாராத ஒரு சிறு பெண்ணுக்குப் போய்க் கடுதாசி எழுதுகிறதாவது? நாலுபேர் கேட்டால் சிரிக்கமாட்டார்களா? படித்து எம். ஏ., பாஸ் பண்ணியிருக்கிற பிள்ளைக்கு இந்தப் பகுத்தறிவு வேண்டாம்?"

"யார் யாருக்குக் கடுதாசி எழுதியிருக்கிறார்கள்? என்ன சங்கதி? விவரமாய்ச் சொல்லுங்களேன்!"

"உன் அழகான பிள்ளை துரைச்சா இருக்கிறானே, அவன், அந்தப் பெண் செல்லத்துக்குக் கடுதாசி எழுதியிருக்கிறான். அவள் அப்பா அம்மா அந்தக் கடிதத்தைப் பார்த்தால் என்ன நினைக்கமாட்டார்கள்?"

"என்னவென்று கடுதாசி எழுதியிருக்கிறான்? உங்களுக்கு யார் சொன்னார்கள்? அந்தப் பெண் வீட்டில் ஏதாவது சொன்னார்களா என்ன?"

"ஒருத்தர் சொல்லுகிறதென்ன? நானேதான் கடிதாசியைப் பார்த்தேனே! அந்தக் கடிதாசியின் நகலே

இதோ இருக்கிறது. நீயே படித்துப்பார்த்துப் பிள்ளையை முத்தமிட்டுக்கொள்."

"என்ன எழுதியிருக்கிறுன்? நீங்கள்தான் படியுங்களேன்."

"அந்தப் பெண் இவன் பேரில் காம வலையை வீசிவிட்டதாம். அவள் குரல் குயில் மாதிரி இருக்கிறதாம். இப்படித்தான் முன்பின் பார்த்திராத பெண்ணுக்கு ஒருவன் கடிதம் எழுதுகிறதோ?"

"உங்கள் வியாக்யானம் இருக்கட்டும்; அந்த லெட்டரைத்தான் படியுங்களேன்!"

அந்தக் கடிதத்தைப் படித்தேன். நான் படித்துக் கொண்டிருக்கும்பொழுது என் மைத்துனன் கோவிந்தராஜனும் ரயிலிலிருந்து வந்துசேர்ந்தான்.

இந்தக் கல்யாண விஷயமாக யோசித்து முடிவு செய்வதற்காக அவனை வரும்படி நான் கடிதம் போட்டிருந்தேன்.

'வா அப்பா, கோவிந்தராஜா! ரயில் என்ன இன்றைக்கு லேட்டோ? முன்னேயே வந்திருக்க வேண்டுமே? உள்ளே போய்க் காப்பி சாப்பிடு."

"இப்போது காப்பி வேண்டியதில்லை.ஸ்நானம் செய்து சந்தியாவந்தனம் பண்ணிவிட்டுத்தான் காப்பி சாப்பிட வேண்டும். ஆகட்டும், இன்னும் அரை மணி போகட்டும். உங்கள் லெட்டரைப் பார்த்தேன். லெட்டரிலிருந்து நல்ல வரன் மாதிரிதான் தோன்றுகிறது. முடிவு செய்துவிடுகிறதுதானே?"

"நீ வருவதைத்தான் எதிர்பாத்துக் கொண்டிருந்தோம். இதன் நடுவில் இந்த முட்டாள் பையன் என்ன பண்ணியிருக்கிறுன் தெரியுமா? இதைப் பார்!" என்று இரண்டு கடிதங்களையும் அவனிடத்தில் கொடுத்தேன்.

படித்துப் பார்த்து 'உம்' என்று சிரித்துக்கொண்டே கடிதங்களை என்னிடம் கொடுத்தான்.

"பிள்ளைகள் புத்தி என்ன கொழுந்துவிட்டு எரிகிறது பார்த்தாயடா? எம். ஏ., யாம் எம். ஏ! " என்று என் ஆத்திரத்தை வெளியிட்டேன்.

"அப்படித்தான் இருக்கும், அத்திம்பேரே! ".

"எப்படித்தான் இருக்கும்? எல்லாப் பிள்ளைகளும் இவ்வளவு 'கிராக்கா'ய்த்தான் இருக்குமோ?"

"உலகத்தில் பிறக்கும் பிள்ளைகளில் ஒரு பிள்ளை தவருமல் எல்லாப் பிள்ளைகளும் பதினெட்டு வயசு முதல் இருபத்தைந்து வயசு வரையில் இப்படித்தான் இருக்கும், அத்திம்பேரே! உங்களுக்குத் தெரியாததா? அது உடம்பில் புது ரத்தம் ஊறுகிற காலம். அது சும்மா இருக்கவிடுமா? உலகத்தையே ஜயிக்க வேணும் என்று உற்சாகம் கிளம்பும் காலம். ஒருவிதமான பயத்தையும் அறியாது. உயர்வான நோக்கங்களும் முயற்சிகளும் தீர்மானங்களும் தலைதூக்கி நிற்கும் காலம். அக்கிரமம், அநியாயம் இவைகளைத் தெருவோடு போகும்போது கண்டாலும் கோபாக்கினியோடு சீறும். ரத்தம் வற்றிப்போன நீங்களும் நானும் நமக்கென்னடா வென்று தெருவோடு போய்விடுவோம். ஒரு சிறு பிள்ளை அப்படிப் போவானு? பின்னல் என்ன நேரும் என்பதை முன்பின் யோசியாமல் அக்கிரமம் செய்கிறவனை நாலறை கொடுக்கிறதற்கு அல்லவா முன்னுடி கிளம்புவான்? துணிச்சல், தைரியம், நியாய அநியாயத்தின்மேல் நிகா, அநியாயத்தைக் கண்டு ஆத்திரம் கொள்வது, அதெல்லாம் அந்த வயசுக்குண்டான சேஷ்டைகள், அத்திம்பேரே!

"பள்ளிக்கூடங்களிலிருந்து நூற்றுக் கணக்கான பிள்ளைகள் அப்பன் ஆத்தாள் பேச்சைக்கூட உதாசீனம் செய்துவிட்டு "ஸ்டிரைக்' பண்ணுகிருர்களே, அவர்களுக்

கெல்லாம் என்ன வயசு என்று யோசனைசெய்து பாருங்கள். முப்பது வயசுப்பிள்ளைகள் படிக்கிற பள்ளிக்கூடமாயிருந்தால் ஒரு பிள்ளை வெளிவராது. அதற்குள் ரத்தம் செத்துப்போயிருக்கும்.

“இவைகளெல்லாம் வயசினுடைய சேஷ்டைகள். அப்போதுதான் தேகாப்பியாஸம் செய்து வலுவு சம்பாதித்து ஸாண்டோ மாதிரி ஆகிவிட வேணுமென்று தோன்றும். உடம்பை அலங்கரித்துக் கொள்ளுகிறது. ஜோராய் நடக்கிறது. அமுத்தல் பண்ணிக்கொள்ளுகிறது, அந்த ஷர்ட்டைப் போட்டுக்கொள்ள வேணும், இந்த மாதிரி பூட்ஸைப் போட்டுக்கொள்ள வேணும், தலையை இப்படிக் கிராப்பு செய்துகொள்ள வேணும், அப்படி வாரி விட்டுக்கொள்ள வேணும் என்று விசித்திர விசித்திரமான ஆசைகள் கிளம்புகிறது, எல்லாம் அந்த வயசில்.

“‘ஐயோ என்ன வேஷம்! என்ன வேஷம்!’ என்று நமக்குத் தோன்றும். அவர்கள் அவைகளை வெகு பெருமையாய் நினைத்துக்கொள்வார்கள்...”

“அன்றைக்குப் பெண்ணைப் பார்க்கப் போனோமேடா! துரைச்சா ரொம்ப ஷோக்காய்ச் சிங்காரித்துக் கொண்டு வந்தான். ‘பெண்ணைப் பார்க்கும்போது ஏதுக்கடா இந்த வேஷமெல்லாம்?’ என்றேன். கேட்டானா?”

“அப்படித்தான் இருக்கும், அத்திம்பேரே, மேலும் புது ரத்தம் ஓட ஆரம்பித்துக் காமம் உதிக்கிற காலமோ இல்லையோ! அதனுடைய சேஷ்டைகள் காட்டித்தான் விடும். அந்த வயசில் பெண்ஜாதி இப்படி இருக்கவேணும் அப்படி இருக்கவேணும் என்று கோட்டை கட்டும். கலயாணம் செய்து பெண்ஜாதி வீட்டுக்குவந்தால் அவளை நாலைந்து வருஷங்கள் என்ன பாடு படுத்துவார்கள்! ஒரு நிமிஷம் தன்னை விட்டு விலகி இருந்தால் கோபம் வந்துவிடும். பெண்ஜாதியோடு பேசமாட்டார்கள். வெளி

யில்போய் வீட்டுக்குத் திரும்பி வரும்பொழுது பெண்ஜாதி எதிரில் வந்து நிற்காமற் போனால் மூஞ்சி கடுகடுக்க ஆரம்பிக்கும். இவன் மனசுக்குள் இருக்கிறதை அறிந்து அவள் நடந்து கொள்ளவேணும். இல்லாவிட்டால், 'மக்கு, நம்ம பேரில் ஆசையில்லே' என்று தானாய் நினைத்துக் கொள்ளும். பெண்ஜாதி வந்த இரண்டு மூன்று வருஷங்கள் வரையில் எடுத்ததற்கெல்லாம் கோபம் வரும். இரண்டும் எதையாவது சாக்கிட்டு அடிக்கொருதரம் கராம்புராம் என்றுதான் இருக்கும். இரண்டு வருஷங்களாய் விட்டதென்றால் அப்புறம் எல்லாம் ஸகஜமாய்ப் போய் விடுகிறது."

"பிள்ளையைச் சொல்ல வந்துவிட்டாரே! அந்த வயசில் இவர் எப்படி இருந்தார் என்று கேளுடா, கோவிந்தராஜா? இவர் ஆடின ஆட்டமும், பண்ணின அசட்டுத் தனமும்....."

"மூடடி வாயை. தம்பி பக்க பலமாய் வந்துவிடவே, தைரியம் ஏறிவிட்டாப்போல் இருக்கிறது!"

"தைரியம் ஏறுகிறதென்ன? நான் தான் கேட்கிறேன், சொல்லுங்களேன்: நீங்கள் எப்படி இருந்தீர்கள்?"

"எப்படி இருந்தேன்?"

"நாலு பேர் முன்னே சொல்லவேணுமா? தனியாய்க் கேளுங்கள்; நீங்கள் ஆடின கூத்தை எல்லாம் சொல்லுகிறேன்? குழந்தை என்னமோ தெரியாமே செய்துவிட்டதாம் அதற்கு........."

"கொயந்தைடீ, கொயந்தை! பல்லேத் தட்டித் தொட்டிலில் விடு."

"உங்களை அப்போ பல்லைத் தட்டித் தொட்டிலில் விட்டேனா, இப்போ துரைச்சாவை விடுகிறதற்கு! வெறுமனே அளக்கிறார்! நீ வராததற்கு முன்னே, அந்தக்

கடுதாசியைப் பற்றி வள் வள் என்று என்பேரில் என்ன விழுந்தார் என்கிறேடா !"

"அவள் கிடக்கிருளடா ! இந்தப் பெண்ணை முடிவு பண்ணிவிடலாம் என்கிருய் ?" என்று கேட்டேன்.

"எனக்கு அப்படித்தான் தோன்றுகிறது."

"அந்தப் பெண்ணின் அப்பா அம்மா அசட்டு லெட்டரைப் பார்த்து என்ன நினைப்பார்களடா ? அதை நினைக்கும்பொழுது எனக்கே வெட்கமாயிருக்கிறது."

"அந்தப் பயம் உங்களுக்கு வேண்டாம் அத்திம்பேரே! அந்தப் பெண் எழுதியிருக்கும் லெட்டரைப் பார்க்கும் பொழுதே தெரியவில்லை, பெண் கிண்டலென்று ? அது ஒருநாளும் காண்பிக்காது, அந்தப் பெண்ணுக்கும் இவனைப் பண்ணிக்கொள்வதில் ரொம்ப ஆவல் என்று அந்த லெட்டரிலேயே ஏற்படவில்லையா ? ஒரு யோசனையையும் செய்யாமல் கல்யாணத்தை முடிவு செய்து விடுங்கள்" என்ருன் என் மைத்துனன்.

# 7

## கல்யாணம்

எவ்வளவோ குழப்பத்தோடும் ஆக்ஷேப சமாதானங்களோடும் துரைச்சாவுக்கும் செல்லத்துக்கும் கல்யாணத்தை முடிவு செய்தோம்.

நல்ல பணக்கார இடமாயிருக்கிறது, பெண் அழகாயிருக்கிறது. ஏராளமான சொத்தோடு வருகிறது, சொல்லிக் கொள்வதற்கும் அந்தஸ்துள்ள டிபுடி கலெக்டர் பெண், என்கிற விஷயங்களை உத்தேசித்து ஒரு பக்கம் முடிவு செய்து விடவேண்டும் என்று ஆவல் அடித்துக் கொண்டது; மற்ருெரு புறத்தில் அந்த வீட்டு அனாசாரத்தைக் கண்டு மனசு கொஞ்சமும் இடங்கொடுக்கவில்லை.

"எங்கும் அநாசாரம் இருக்கிறதுதான்; பிராம்மண ஜாதியில் பிறந்து பூணூலையே அறுத்துப் போட்டு விட்டு இருக்கிறார் என்றால் அந்த இடத்தில் எப்படிடா சம்பந்தம் பண்ணுகிறது? நம் ஜாதி என்ன? குலம் என்ன! கல்யாணத்தில் நாலு பந்துக்கள் நடுவில் நம்முடைய சம்பந்தி இப்படி வந்து உட்கார்ந்தான் என்றால் அதைவிட என்ன அவமானம் வேண்டுமடா? அவன் தர்ப்பணம் பண்ணுகிறதில்லை என்றால், ஏதோ அவன் வீட்டோடு போச்சு என்றாலும், பூணூலையே கழற்றிப் போட்டு விட்டிருக்கிறான் என்றால் இதை விட இன்னும் என்ன வெட்கக்கேடு இருக்கிறதடா? இந்தக் காலத்தில் எப்படி எப்படியோ, இருக்கிறதுதான். காலம் அப்படியாய்விட்டது. ஆனாலும் இலை மறைவு காய் மறைவு என்பது இல்லையா?" என்று என் மைத்துனன் கோவிந்தராஜனிடம் சொல்லிக்கொண்டிருந்தேன். துரைச்சாவும் அப்பொழுது அங்கே இருந்தான்.

"இலை மறைவு காய் மறைவு என்றால் என்ன அர்த்தம், அப்பா? திருட்டு வேஷம் என்றுதானே அர்த்தம்? அவர் திருட்டு வேஷம் போடவில்லை என்கிறீர்கள். வேதநாயகம் பிள்ளை எழுதி யிருக்கிறாரே. அந்தப் பாட்டைக் கேட்டு இருக்கிறீர்களோ, இல்லையோ, மாமா?

'ஒருபெண்வேண் டாமென்று தொள்வோம் சந்நியாஸம்
ஊரிலுள்ள பெண்கள் மீதெல்லாம் நேசம்
பருக்கை பசியில்லாத போதுபவாசம்
பசித்தால் ஒருபானை பருக்கையும் நாசம்
கையிலோ பிடிப்பது ஓர்ஜப மாலை
கக்ஷத்தில் வைப்பது ஓர்கன்னக் கோலை
மெய்யாகப் படிப்பதோ தர்ம நூலை
மேலும் மேலும் அவர்க்குத் துன்மார்க்க வேலை.'

நம்மைப் போல் இருப்பவர்களைப் பார்த்துத்தான் வேத நாயகம் பிள்ளை அம்மாதிரி எழுதியிருக்கிறார் என்று தோன்றுகிறது. வைஷ்ணவன் வெங்காயம், முருங்கைக்காய் இவைகளெல்லாம் சாப்பிடக்கூடாது என்று தர்ம சாஸ்திரம் சொல்லுகிறதே; நம்மாத்தில் எப்படி? மாசத்துக்கு ஒரு வண்டி வெங்காயம் வாங்கி யாகிறது, வயிற்றுக்குள்ளும் போயாகிறது. முருங்கைக்காயை மரம் மரமாய் ஒடித்துத் தள்ளிக் கொண்டிருக்கிறோம். ஆனால் காதில் பூணூலைச் சுற்றுவதில் குறைச்சலில்லை. மூக்கைப் பிடித்துக்கொள்ளுகிறதிலும், 'ஏள்ள ஏள்ள' 'திருவுள்ளம்' 'அடியேன்' என்ற இந்த வைஷ்ணவ பரிபாஷைகளிலும் ஒரு குறைச்சலும் இல்லை. இப்படி இருந்தால் ஆசாரம்! மனசிலுள்ளபடி வெளியிலும் இருந்தால் அநாசாரம்! அவன் பிரஷ்டன்!" என்று வெகு ஆத்திரமாய்த் துறைச்சா கிளம்பினான்.

"ஆனால் சுருட்டுக் குடிக்கிறது சரிதான்?"

"வைஷ்ணவன் வெங்காயம் சாப்பிடுவது சரியானால் சுருட்டுக் குடிக்கிறதும் சரிதான்!"

"பூணூலையும் அறுத்துப் போட்டு விட்டு இருக்கலாம்?"

"நாம் பூணூலைப் போட்டுக் கொண்டிருக்கிறோமே என்று தினம் பெருமாள் வைகுண்டத்திலிருந்து இறங்கி வந்து நம் யோகக்ஷேமத்தை என்ன விசாரித்துவிட்டுப் போகிறார்? பூணூல் இல்லாத அவரை என்ன உபேக்ஷை பண்ணிக் கெடுத்துவிட்டிருக்கிறாரோ?"

"நீயும் பூணூலை அறுத்துப் போட்டுவிட்டு ஒரு சுருட்டை வாயில் வைத்துக்கொண்டு போயேண்டா?" என்று கத்தினேன். எனக்கு அவ்வளவு ஆத்திரம் வந்தது. சட்! என்ன பிள்ளைகள்!

துரைச்சா 'உர்' என்று மூஞ்சியை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான்.

"அது போகட்டும். அந்த டிபுடி கலெக்டர் தம்பி பெண் ஒரு மலையாள நாயரைக் கல்யாணம் பண்ணிக் கொண் டிருக்கிறுளாமே; அதற்கு என்னடா சொல்லு கிறுய்?"

"டிபுடி கலெக்டர் விட்டுக்கு அடுத்த வீட்டிலிருக்கும் ஒரு பெண் ஒரு மகம்மதியனைக் கல்யாணம் பண்ணிக் கொண்டிருக்கிருளாம்."

"பேச்சைப் பார்த்தாயா, கோவிந்தராஜா? தம்பி பெண்ணும் அடுத்த வீட்டுப் பெண்ணும் ஒன்றுதானேடா? நாளைக்கு உன் மாமனுர் தம்பி பெண்ணும் அந்த நாயரும் உறவு கொண்டாடிக்கொண்டு நம்மோடு சம பந்தியில் வந்து உட்காருவார்களோ இல்லையோ? அது உனக்குச் சம்மதந்தானே?"

"இப்போது நடக்கிற தென்னவோ? ஹோட்டலுக்கு டிபன் சாப்பிடப் போகிறீர்களே, உங்களுக்கு என்று தனியாய் ஓர் அறையை ஒழித்துவிட்டு 'ஓம் பூர் புவஸ்ஸுவஹ' சொல்லி, புண்ணியாஹவாசனம் பண்ணி உங்களுக்கு டிபன் கொண்டுவந்து வைக்கிருனே?"

"ஹோட்டலில் சாப்பிடுகிறதும் ஒன்று, கல்யாணத்தில் சாப்பிடுகிறதும் ஒன்று என்கிருயோ? உன் மச்சினி புருஷன் நாயரா யிருந்தாலும் பாதகமில்லை என்கிருய்?"

"ஏதோ அந்தப் பெண்ணுக்கும் அந்த நாயருக்கும் காதல் ஏற்பட்டது; கல்யாணம் பண்ணிக்கொண்டார்கள். அதைப்பற்றி நமக்கென்ன?"

'காதல்' எனவே எனக்குச் சிரிப்பு வந்துவிட்டது. "காதல்! காதல்! காதலாமே! உனக்கு என்னவென்று தெரியுமடா, கோவிந்தராஜா?" என்று விழுந்து விழுந்து சிரித்தேன். என் சம்சாரம் அங்கே வந்தாள். துரைச்சா

வெகு விரைப்பாக, 'விர்' என்று எழுந்து போய்விட்டான்.

"இந்தப் பிள்ளை அழகைக் கண்டு உன் உடன்பிறந்தாளுக்கு அடக்கமுடியாப் பெருமையடா!" என்றேன். அதை அவள் காதில் வாங்கிக்கொள்ளவில்லை.

'இவ்வளவு ஆக்ஷேபங்கள் சமாதானங்கள் எல்லாம் எதுக்கடா, கோவிந்தராஜா? குழந்தை அவளையே தான் பண்ணிக்கொள்வேன் என்று பிடிவாதமாய்ச் சொல்லுகிறான். உங்களுக்கென்ன? சரிதான் என்று சொல்லிவிட்டுப் போங்களேன். வைத்துக்கொண்டு ஆளப் போகிறவன் அவன். நமக்கென்ன? நாம் இன்றைக்கு இருக்கிறோம்; நாளைக்கு இல்லை. பெண் வீட்டார் ஆசாரமாயிருந்தால் தேவலையா, இல்லாவிட்டால் தேவலையா? இந்த நாளில் எங்கே போனாலும் இந்த அநாசாரம் இருக்கும். விடுங்கோ. அவனோடு வாய் கொடுத்துக் கொண்டிருப்பானேன்?" என்றாள்.

"மாட்டுப்பெண்ணை வைத்துக்கொண்டு குடித்தனம் பண்ணப் போகிறவள் நீ. உனக்குச் சம்மதமானால் எனக்கும் சம்மதந்தான். உனக்குச் சம்மதந்தானேடீ?"

"எனக்குச் சம்மதந்தான்!"

"அப்படியானால் எனக்கு என்ன வந்தது? நடக்கட்டும்! மாமாவான உன் அபிப்பிராயம் என்னடா?"

"நான் சொல்லுகிறதென்ன என்கிறீர்களோ, அத்திம்பேரே-" என்று என்னைச் சமாதானப்படுத்துகிறவன் போல் கோவிந்தராஜன் ஆரம்பித்தான்; "அக்கா சொல்லுகிற மாதிரி பையன் இஷ்டப்பட்டு அவளையே பண்ணிக்கொள்ள வேணுமென்றால் அப்படியே விட்டு விடுங்கள் என்கிறேன், உங்கள் ஆக்ஷேபணைகளை யெல்லாம் யோசித்துப் பார்த்தேன். ஏதோ ஒரு நாளைக் கல்யாணம். அன்றைக்கு எவன் வந்தான் எவன் போனான் என்று கவனிக்

கப்போகிறவர்கள் யார்? மாமனர் பூணூலில்லாமல் இருக்கிருன் என்று எவனுக்குத் தெரியப்போகிறது? அவர் என்னமோ போட்ட ஷர்ட்டையோ பனியனையோ கழற்றப் போகிறதில்லை. அவர்கள் பேசினதில் தகப்பனுரும் தீயாரும் பெண்ணைத் தாரை வார்த்துக் கொடுக்கப் போகிறதில்லையாம். ஏதோ சாக்குச் சொல்லி அந்தப் பெண்ணின் மாமாவையும் அவன் பெண்ஜாதியையுந்தான் தாரை வார்த்துக் கொடுக்கச் சொல்லப் போகிருர்களாம். ரொம்ப நல்லதாய்ப் போய்விட்டது. அந்த நாயரும் அவன் பெண்ஜாதியும் கல்யாணத்துக்கு வருகிருர்களோ இல்லையோ? அவர்கள் வந்தாலும் எப்பொழுதோ வரப்போகிருர்கள்: போகப் போகிருர்கள். மேலும் இந்தக்காலத்தில் ரொம்ப நூற்று நூற்றுப் பார்த்து முடியாது. அத்திம்பேரே! பசங்கள் போகிற வழியேதான் விட்டுச் செல்லவேண்டும். பெண் சொத்தோடு வருகிறதே, அதைச் சொல்லுங்கள்!"

"சரி, உன்க்கும் சம்மதந்தானேடா? இனி வேறு பேச்சில்லை. உடனே போய் முடி" என்றேன்.

கல்யாணம் வெகு விமரிசையாக நடந்தது. நாங்கள் பயந்தபடி ஒருவித ஆபாஸமும் ஏற்படவில்லை. அந்தப் பெண்ணுக்கு மாமாதான் பொறுப்பா யிருந்து கல்யாணத்தை நடத்தினர். அவர்தாம் தாரைவார்த்துக் கொடுத்தார். பன்னிரண்டு திருமண்களுடன் அவர் ஜ்வலித்தார். "இப்படி ஏள்ளியிருக்கணம்", "அப்படிணு ஏள்ளியிருக்கணம்", "அடே, ஸம்பந்தி ஸ்வாமிக்கு அக்கார வடிசல் பரிமாறடா", "இன்னும் கொஞ்சம் அமுது செய்யணும்" என்று இம்மாதிரி பரிபாஷைகளைப் போட்டு விழுந்து விழுந்து உபசரித்தார்.

பெண்ணுக்குத் தகப்பனர் ஒரு பிஜாமாவையும் காலில் செருப்பையும் போட்டுக்கொண்டு தெருக்கொட்டகைப்

பந்தலின்கீழே உட்கார்ந்திருந்தார். அவர் எங்களோடு சாப்பிடவில்லை. கல்யாணம் வெகு வைதிகமாய் நடந்து விட்டது. அவ்வளவுதானே?

கல்யாணம் முடிந்த பிறகு பெண்ணை எங்கள் வீட்டுக்கு அனுப்பும்படி கேட்டோம்.

"ஆஹா! எப்போது வேண்டுமானாலும் அழைத்துக் கொண்டு போங்கள், உங்கள் சொத்து; இனி எங்களுக்கு என்ன அதிகாரம் இருக்கிறது?" என்றார் அவள் தகப்பனார்.

அதற்குள் என் சம்சாரம் வந்து, "இப்பொழுது அழைத்துக் கொண்டு போகவேண்டாம். ருதுசாந்தி என்று ஒரு மாசத்திற்குள் ஒருநாள் குறிப்பிட்டு அன்றைத்தினம் முகூர்த்தத்தை நடத்தி வீட்டுக்கு அழைத்துக் கொள்ளலாம்" என்றாள். அந்த வரும்படியை விட்டு விடக்கூடாது என்பது என் சம்சாரத்தின் அபிப்பிராயம்.

கடைசியில் ருது சாந்தியும் நடக்கவில்லை, ஒன்றும் இல்லை. எல்லாம் துரைச்சாவின் அசட்டுத்தனத்தால். கட்டில், மெத்தை சாமான்கள், பீரோ, நாற்காலி, வெள்ளி பித்தளைப் பாத்திரங்கள் எல்லாம் ஒரு நாள் வீடு வந்து சேர்ந்தன. பெண்ணையும் கொண்டுவந்து விட்டுவிட்டார்கள்.

# 8

## தனிக் குடித்தன யோசனை

பெண்ஜாதி வீட்டுக்கு வருகிறாள் என்றாலே பிள்ளைகளுக்கு வாழ்க்கைத் தத்துவம் மாறிவிடும். தாயார், தகப்பனார், அவர்கள் வீடு, அண்ணன் தம்பிகள், அக்கா தங்கை என்கிற ஆசாபாசங்கள் விட்டுப்போய், பெண்ஜாதி, மைத்துனன், மைத்துனி, மாமியார் வீடு, இந்த வழியில் மோகம் ஏற்பட்டு விடும். அதுவும், தான் பிறந்த வீட்டுக்கு ஒரு

படி மேலாய் மாமியார் வீடு அமைந்துவிட்டால் கேட்க வேண்டியதில்லை. 'மைத்துனனுக்கு மிஞ்சிய உறவுமில்லை, மயிருக்கு மிஞ்சிய கறுப்பும் இல்லை' என்கிற வசனம் உலக இயல்பை ஒட்டாமலா ஏற்பட்டிருக்கிறது? புது சிநேகம் ஏற்படுகிற காலத்தில் அது பழைய சிநேகங்களையும் ஆசாபாசங்களையும் அடித்துக்கொண்டு போய்விடும்.

மைத்துனன் மைத்துனியைப் பார்க்கும்போது ஏற்படும் முகமலர்ச்சியும் உற்சாகமும் தம்பி தங்கையை பார்க்கும்போது ஏற்படுமா? மைத்துனன் கோபாலன் வந்துவிட்டால் தலைகாலே தெரியாது.

"ஏண்டா கோபாலா, இன்றைக்கு ஸினிமாவுக்குப் போகலாமாடா? பட்டணத்தில் 'கோகுல லீலா' ஓடுகிறதடா! ரொம்ப நன்றாயிருக்கிறதாம்; போய் வரலாம் வா."

"இன்றைக்குச் சாயந்தரமே ஊருக்குப் போகலாமென்றிருக்கிறேன்; மாப்பிள்ளை. இன்னொரு தரம் பார்த்துக்கொண்டால் போச்சுது."

"இன்றைக்கு ஊருக்குப் போவதாவதடா? எல்லாம் இன்னும் இரண்டு நாள் பொறுத்துப் போகலாம். 'கோகுல லீலை'யைப் பார்க்காமலாடா போகிறது? இன்றைக்குக் 'கோகுல லீலை'யைப் பார்த்துவிடுகிறது. நாளைக்கு ஞாயிற்றுக்கிழமை; புழலேரிக்குப் போய் வந்துவிடலாம். அப்புறம் ஊருக்குப் போகிறதைப் பற்றி யோசிக்கலாம்.

'கோகுல லீலை'க்குப் போகிறதென்றால் நேராய் ஸினிமாக் கொட்டகைக்கா போய் நிற்கிறது? வழியில் காப்பி ஹோட்டலில் நுழைய வேண்டாமா? பிராம்மணனுக்கு எந்தச் சடங்கைத் துவக்கினாலும் முன்னாடி ஆசமனம் பண்ண வேண்டுமென்கிற மாதிரியாய், எந்த வேலைக்கு இப்போது போனாலும் முன்னாடி காப்பி ஹோட்டலுக்குள் நுழையாமல் போக முடியுமா? எப்போது வெளியில்

புறப்பட்டாலும் முதல் வேலை காப்பி ஹோட்டல். அதற்கப்புறந்தான் மற்ற வேலையெல்லாம். அதுவும் மைத்துனன் வந்திருக்கும்போது!

"என்னடா சாப்பிடுகிறாய்?"

"எனக்கு வயிறே சரியாயில்லை, மாப்பிள்ளை. அரைக் 'கப்' காப்பி கொண்டுவரச் சொல்லுங்கள். அது போதும்."

"நான்ஸென்ஸ்! இரண்டு ப்ளேட் ப்ரூட் ஸலாத், இரண்டு மங்கோலா, இரண்டு மசாலா தோசை, இரண்டு ப்ளேட் பூரி உருளைக்கிழங்கு கொண்டு வா. மேலே அப்புறம் பார்த்துக்கலாம். வெய்யிட்டர், ஐஸ் வாடர்!"

"வேண்டாம், மாப்பிள்ளை. எல்லாம் ஒரு ப்ளேட் கொண்டுவரச் சொல்லுங்கள் உங்களுக்கு. எனக்கு வேண்டாம். வயிறு சரியாயில்லை என்கிறேனே!"

"அவர் அப்படித்தான் சொல்லுவார். இரண்டு, இரண்டு கொண்டு வா, சீக்கிரம்!"

தம்பியும் தங்கையும் 'கோகுல லீலை'க்கு அழைத்துக் கொண்டு போகும்படியாய்ப் பத்து நாளாய் மன்றாடிக் கொண்டிருக்கிறார்கள். "என்னை ஒருநாளைக்கு மௌண்ட் ரோட் காப்பி ஹோட்டலுக்கு அழைத்துக்கொண்டு போயேன், அண்ணா" என்று தம்பி தினம் கெஞ்சுகிறான். அதெல்லாம் காதில் விழுமா? பணம் கொட்டிக் கிடக்கிறதோ!

மைத்துனியைப் பார்த்து விட்டால் இன்னும் குஷி அதிகம். பெண்ணினமோ இல்லையோ?

என்ன சிரிப்பு. என்ன தமாஷ், என்ன பரிகாசம், என்ன சமத்கார வார்த்தைகள்!

"போங்கோ அத்திம்பேரே!" என்று அந்தப் பெண் நமட்டுச் சிரிப்புச் சிரித்து ஸாஹஸங்களெல்லாம் பண்ணும். என்ன ஆனந்தம்! தங்கை என்றாலோ? மக்கு!

மைத்துனன் ஒரு தரம் வந்துவிட்டுப்போனால் மாதப் பணத்தில் முக்கால்வாசி தீர்ந்துவிடும். அவன் செலவழிக்கவா சொல்லுகிறான்? இல்லை. நம்முடைய உற்சாகத்தில் நாம் செலவழிக்கிறோம். அதில் திருப்தியே தவிர வருத்தம் இல்லை.

பிள்ளைக்குக் கல்யாணம் ஆய்விட்டால் வாழ்க்கை நோக்கங்கள் வேறுபடத்தான் படும். சம்சாரத்தை மேன்மை ஸ்திதியில் வைக்கிற யோசனையிலும் இருவரும் யதேச்சையாயும் ஆனந்தமாயும் காலம் கழிக்கிறதிலுமே மனம் போய்க்கொண்டிருக்கும். மாமியார் மாமனாருக்கு உள்ளடங்கி யிருக்கும்படியான நிலையில் அவளை வைக்க வேண்டியிருந்தால் 'என்ன செய்கிறது!' என்று விதியை மனம் நிந்திக்கும். தாயார் தகப்பனார் அண்ணன் தம்பிகள் எல்லோரும் பெரிய தொந்தரவாகப் படுவார்கள்.

செல்லம் 'இண்டர்' படித்த பெண். தகப்பனார் டிபுடி கலெக்டராய் இருந்தார். நல்ல செல்வாக்கில் வளர்ந்தவள். அவளைக் கொண்டுவந்து மாமியார் மாமனார் மைத்துனன் நாத்தனார் இவர்கள் மத்தியில் அடக்கிக் கட்டிப்போட்டு வைக்கிறது நியாயமா என்று துரைச்சா நினைத்தான் போலும்! கல்யாணமானவுடன் தனிக் குடித்தனம் ஏற்படுத்தி விடுவதுதான் விவேகம் என்று எண்ணி அதற்கான முயற்சிகளெல்லாம் செய்து வந்திருக்கிறான் என்று எங்களுக்குப் பின்னாடி தெரிய வந்தது. தனக்கு ஒரு வீட்டைக் கூடப் பார்த்து வைத்து விட்டானும்! அது விஷயம் எனக்கும் தெரியாது; என் சம்சாரத்துக்கும் தெரியாது.

எனக்கு மூன்று பெண்கள், இரண்டு பிள்ளைகள்; துரைச்சாதான் எல்லோருக்கும் மூத்தவன். அறுபது ரூபாய் பென்ஷன் வருகிறது எனக்கு. ரிடையர் ஆனபோது பிடிப்புப் பணம் கொஞ்சம் வந்தது; கொஞ்சம் கையில்

இருந்தது; கொஞ்சம் கடன் வாங்கினேன்; எல்லாவற்றை யும் போட்டு மாம்பலத்தில் ஒரு வீட்டை வாங்கிவிட் டேன். கடன் வாங்கினேனே, கையிலிருந்து போட்டேனே இரண்டு பெண்களைக் கல்யாணம் செய்து கொடுத்து, அவர்களுக்குச் செய்யவேண்டியதை யெல்லாம் செய்து புருஷன்மார்கள் வீட்டுக்கு அனுப்பிவிட்டேன். பெரிய பெண் புருஷன் பம்பாயில் வேலையில் இருக்கிறன். வருஷத்துக்கு ஒரு தரம், இரண்டு வருஷத்துக்கு ஒரு தரம் பெண்ணும் மாப்பிள்ளையும் இங்கு வந்து போவார்கள். அவர்கள் சம்பந்தப்பட்ட வரையில் ஏதோ சௌக்கிய மாகத்தான் இருக்கிறர்கள்.

இரண்டாவது பெண்ணைக் கொடுத்த இடத்திலும் பாதகம் இல்லை. அவள் புருஷன் 'டிரங்க் டெலிபோனில்' எண்பது ரூபாய் சம்பளத்தில் இருந்து வருகிறன். இரண்டு பெண்களும் அவரவர்கள் குடும்பங்களையும் குழந்தைகளையும் பார்த்துக்கொண்டு அவர்கள் பாட்டுக்கு இருந்துவருகிறர்கள். அவர்களால் எனக்கு ஒரு தொந் தரவும் இல்லை.

இன்னும் கல்யாணமாவதற்குப் பன்னிரண்டு வயசில் ஒரு பெண் இருக்கிறது. சின்னப் பையன் ஒருத்தன் ஐந்தாவது பாரத்தில் படிக்கிறன். அடுத்த வருஷம் எஸ். எஸ். எல். ஸி. க்குப் போகவேண்டும்.

துரைச்சாவுக்கு எம். ஏ., தேறுகிற வரையில் படிப்புச் சொல்லி வைத்தேன். நான் வெளியூர்களில் வேலையா யிருக்கும்பொழுது எஸ். எஸ். எல். ஸி. வரை யில் வீட்டோடு இருந்து படித்தான். அப்புறம் காலே ஜுக்குச் சென்னபட்டணம் வந்துவிட்டான். ஒரு பிள்ளையைக் காலேஜில் படிக்க வைக்கிறதென்றல் மட் டான செலவா பிடிக்கிறது?

ரிடையர் ஆவதற்கு மூன்று நான்கு வருஷங்களுக்கு முன்தான் எனக்கு நூற்றிருபது ரூபாய் சம்பளம் ஆயிற்று. அதற்கு முன்னெல்லாம் எண்பது எண்பத்தைந்துதான் வாங்கிக்கொண்டிருந்தேன். இந்தச் சம்பளத்தில் இரண்டு பெண்களுக்குக் கல்யாணம் பண்ணினேன். துரைச்சாவுக்கு மாதம் ஐம்பது அறுபது என்று அனுப்பிக் கொண்டிருந்தேன். கஷ்ட மென்றாலும் கஷ்டம், சொல்லி முடியாது.

நான் அனுப்பும் பணத்தில் பாதிப் பணம் துரைச்சா காப்பி ஹோட்டல்களுக்கும் ஸினிமாவுக்கும் பாட்டுக் கச்சேரிகளுக்குமாகச் செலவழித்துக் கொண்டிருக்கிறான் என்று சென்னபட்டணத்திலிருந்து வருகிறவர்கள் சொல்லுவார்கள்.

என் சம்சாரத்தினிடத்தில் போய் வெகு ஆத்திரமாக இந்தச் சங்கதியைச் சொல்லுவேன்.

"சொல்லுகிறவர்கள் ஒன்று என்றால் இரண்டாய்ச் சொல்லுவார்கள். அதையெல்லாம் நம்பாதீர்கள். அப்படிச் செலவழிந்தால்தான் என்ன? நாலு பேரைப் போல் நம்ம குழந்தையும் இருக்கவேணுமோ, இல்லையோ? சிறுசுகள் அப்படித்தான் இருக்கும்" என்று பதில் சொல்வாள். கடிதம் தவறாமல் பணத்துக்கு எழுதுகிறதாகவே இருக்கும்.

"இவனுக்குப் பணம் அனுப்பி மெய் சொல்லுகிறதாயில்லை. பணத்துக்கு எங்கே போகிறது?" என்று என் சம்சாரத்தினிடத்தில் சொல்லி வருத்தப்பட்டுக் கொள்வேன்.

"அதற்கு என்ன செய்கிறது? குழந்தை கண்காணா ஊரில் பணம் இல்லாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்க விடலாமோ? இந்தாருங்கோ: இந்த இரண்டு வளையல்களைக் கொண்டுபோய் வைத்துப் பணம் வாங்கி அனுப்

புங்கள். வட்டி ஏருமல் விற்கவேணுமாளுலும் விற்று விடுங்கள்" என்பாள். வைத்த நகையை மீட்கிறது எப்படி? அதையே ஒன்றுக்குப் பாதியாய் விற்று வட்டியோடு சேர்த்து அடைக்கும்படியாகும்.

இந்த மாதிரி வளையல் போச்சு, மூன்று வடம் போட்டுக் கொண்டிருந்த சங்கிலியில் இரண்டு வடம் போச்சு, ஒன்று ஒன்ருய் என் சம்சாரத்தின் உடம்பைச் சுத்திபண்ணியாச்சு.

ஒவ்வொரு நகையை வாங்கிக்கொண்டு போகும்போதும் என் கண்ணில் ரத்தம் சொட்டும். 'இதற்கா நம்மை இவள் கல்யாணம் செய்துகொண்டாள்!' என்று என் சம்சாரத்தை நினைத்து என் கண்ணில் நீர் பெருகும்.

"நாளைக்கே பாஸ் பண்ணிவிட்டு வந்து துரைச்சாவுக்கு ஒரு நல்ல வேலையும் அகப்பட்டுவிட்டால் உங்கள் கஷ்டம் தொலைந்தது" என்று என்னை அவள் உற்சாகப் படுத்திவந்தாள்.

துரைச்சா ஒரு வருஷம் இண்டரில் தேர்ச்சிபெறவில்லை; பி. ஏ. யில் ஒரு வருஷம் ஒரு பாகம் போய்விட்டது.

பி. ஏ. யில் தேறினவுடன், "எங்காவது வேலைக்குப் பிரயத்தனப்படடா" என்றேன். எம். ஏ. க்குப் படிக்க வேண்டும் என்ருன்.

"எம். ஏ. பாஸ் பண்ணினல் இன்னும் பெரிய வேலையாகுமாமே. குழந்தை அதற்குந்தான் படித்துவிடட்டுமே" என்ருள் என் சம்சாரம்.

அதுவும் ஆயிற்று. கெஞ்சாதவர்களை எல்லாம் கெஞ்சி அவனுக்கு ஒரு வேலை செய்துவைத்தேன். முதலில் நாற்பது ரூபாயில் ஆரம்பித்தது. அப்புறம் எழுபது ரூபாய் ஆயிற்று. அவனுக்கு வருகிற எழுபது ரூபாயையும் என் பென்ஷன் அறுபது ரூபாயையும் வைத்துக்கொண்டு கோப்பியமாய்ச் சம்சாரத்தை நடத்திவந்தோம்.

கல்யாணமாய் இன்னும் ஒரு மாதம் ஆகவில்லை. அவன் தனி சம்சாரம் வைத்துக்கொள்ள உத்தேசித்தானும்!

மேலே நான் பிள்ளைகள் போக்கைப்பற்றி எழுதின வேதாந்தமெல்லாம் சரிதான். ஆனால் என் மனசு இந்தச் சமயத்தில் அந்த விவேகத்தை உணருமா?

# 9

## விஷயம் புரிந்தது

எம். ஏ. பரீட்சை கொடுத்ததன் பிரயோசனம் இம்மாதிரி திருட்டுப் பேச்சுப் பேசக் கூடவா துரைச்சாவுக்குத் தெரியாமல் போய்விடும்?

தாயின் சௌகரியத்தை உத்தேசித்து, அவளுக்கு ஒரு விதமான கஷ்டமும் வைக்கக்கூடாதென்ற எண்ணத்தினாலேயே தனி சம்சாரம் வைத்துவிடலாமா என்று உத்தேசிப்பதாக அவளிடம் டக்காய்ப் பேச ஆரம்பித்தானும்.

"பிள்ளைக்குக் கல்யாணமாய் மாட்டுப்பெண் வருகிறாள் என்றால், நீ கண்டது மேலும் கஷ்டமே தவிர உனக்கு ஒரு சுகமும் இல்லைபோல்தென்படுகிறதே அம்மா" என்று தாய்க்குப் பரிவாய்ப் பேசுகிறமாதிரி ஆரம்பித்தானும். பின்னாடி என் சம்சாரம் சொன்னாள்.

"எனக்கென்னடா கஷ்டம்? நீயும் உன் பெண்ஜாதியும் உல்லாசமாயிருக்கிறீர்கள் என்றால் எனக்குச் சந்தோஷமா, கஷ்டமா?" என்றாளாம் அவள்.

"அதைச் சொல்ல வரவில்லை அம்மா. பிறந்தவன்றே பிடித்து அந்தப் பெண்ணுக்கு மெத்தை தைத்த நாற்காலியில் உட்கார்ந்திருந்தே வழக்கம்..."

"இங்கேயும் ஒரு மெத்தை தைத்த நாற்காலியை வாங்கிப் போடேன்."

"நான் ஒன்று சொன்னால் நீ ஏதோ வேறு ஒன்றைச் சொல்லுகிறாயே! அவளுக்கு ஒரு மெத்தை தைத்த நாற் காலியை வாங்கிப் போடவேணுமென்று நான் சொல்ல வரவில்லை. அம்மாதிரி வளர்ந்த பெண் உனக்கு வீட்டு வேலையில் என்ன ஒத்தாசையாயிருக்கப்போகிறாள் என்று சொன்னேன். பள்ளிக்கூடம் போவதும், பாட்டுப் பாடுவதும், வீணை வாசிப்பதுமாய் இருந்த பெண்; அவளுக்கு வீட்டுவேலை என்ன தெரியப்போகிறது? அவளுக்கு நீ சிசுருஷை பண்ணிக் கொண்டிருக்கும் படியாகத்தான் இருக்கும் போலிருக்கிறதே என்று சொன்னேன்."

"வீட்டு வேலையில் எனக்கு என்னடா ஒருத்தர் ஒத்தாசை? இத்தனை வருஷ காலமாக எனக்கு ஒத்தாசை யாய்ப் பக்கத்திலேயே யார் இருந்து வந்தார்கள்? ஜுரமோ குளிரோ, உடம்பில் ஜீவன் இருக்கிறதோ இல் லையோ, நான் செய்துகொண்டு வந்தேன் இல்லையா? அந்த மாதிரி உடம்பில் உரம் இருக்கிற வரையில் இன்னமும் நான் செய்துவிட்டுப் போகிறேன்."

"நாங்கள் தாம் உன் குழந்தைகள்; எங்களுக்கு நீ செய்கிறது நியாயம். அவளுக்கும் நீ செய்வானேன்? அவளையும் அழைத்துவந்து வைத்துக்கொண்டு உன்னைத் தொந்தரவு செய்கிறது நியாயமா என்று என் மனம் கஷ்டப்படுகிறது."

"உங்களுக்குச் செய்து நீங்கள் என் தலையில் கிரீடம் வைக்கிறதென்னவோ? அவள் வைக்காமல் போய் விடுகிறது என்னவோ? நீங்கள் என் பிள்ளை பெண்களா யிருந்தால், அவள் என் பிள்ளையின் பெண்ஜாதி; என் மாட்டுப்பெண்."

"மாட்டுப்பெண் உனக்குச் சுசுருஷை செய்கிறதா, நீ மாட்டுப்பெண்ணுக்குச் செய்கிறதா? உலக வழக்கம் எப்படி?"

"இவ்வளவு வேதாந்தம் பேசுகிறவனுக்கு அப்பொழுது எங்கேடா போச்சு அறிவு? அவளையேதான் பண்ணிக்கொள்வேன் என்று ஒரு காலில் நின்றாயே? நீ அவளைப் பண்ணிக் கொண்டதிலும் நான் குற்றம் சொல்லவில்லை. நீ ஆசையாய் அவளைப் பண்ணிக்கொண்டாய்; எங்களுக்கும் அதில் ரொம்பத் திருப்திதான். நீங்கள் இருவரும் ஒருத்தருக் கொருத்தர் ஒருவிதமான மனக்கசப்பும் இல்லாமல் என்றைக்கும் சந்தோஷமாய்ச் சிரித்து விளையாடிக்கொண் டிருந்தால் அதுதான் நாங்கள் குழந்தைகளைப் பெற்றதற்குப் பிரயோஜனம். நீங்களெல்லோரும் ஒரு நோவு நொடி இல்லாமல் அவரவர்கள் பெண்ஜாதிகளோடும் அகமுடையான்மார்களோடும் சந்தோஷமாயிருக்கிறீர்கள் என்று ஏற்பட்டால் அதைவிட எங்களுக்கு உலகத்தில் வேண்டியது என்னடா அப்பா இருக்கிறது?"

"அதெல்லாம் சரிதான் அம்மா. உனக்கு ஒரு கஷ்டமும் வைக்காமல் நாங்களெல்லாம் சந்தோஷமாயிருந்து உன்னையும் சந்தோஷமா யிருக்கும்படிச் செய்யக்கூடாதா என்கிறேன்."

"எனக்கு என்னடா கஷ்டம்? மாட்டுப்பெண் என்று ஆத்துக்கு வந்து, அதற்கு வெள்ளி புதன் என்று அதன் தலையில் இரண்டு கை எண்ணெயை வைத்து ஸ்நானம் செய்வித்து, தினம் தலைவாரிப் பின்னிப் பூவைத்து, அதைச் சாப்பிடடி, இதைச் சாப்பிடடி என்று நாக்குக்கு ருசியாய் நாலு விதம் பண்ணிப்போட்டு, நல்ல புடவையைக் கட்டி நல்ல ரவிக்கையாய்ப் போட்டு கோவில், குளம், உற்சவம், ஸினிமா என்று அழைத்துக்கொண்டு போகவேணும் என்று எங்களுக்கு ஆசையா யிருக்குமா, இதெல்லாம் கஷ்டமா யிருக்குமாடா?"

"ஐயோ அம்மாவே!" என்று துரைச்சா இடி இடி என்று சிரித்தானும்.

"ஏண்டி அம்மா! உலகமெல்லாம் நாகரிகம் கொள்ளை போய்க்கொண்டிருக்கிறது. நீ மாத்திரம் இன்னும் பழங் காலத்துப் பேர்வழியாகவே இருந்துவருகிறாயே என்று எனக்குச் சிரிப்புச் சிரிப்பாய் வருகிறது. நீ அவளுக்குத் தலைவாரிப் பின்னினால் அவள் பின்னிக்கொள்ளுவாளா? நீ பின்னிவிட்டாலும் அந்த நிமிஷமே அதை அவிழ்த்து விட்டு வேறு மாதிரியா யல்லவா பின்னிக்கொள்வாள்? அவளுக்கா புடைவையும் ரவிக்கையும் போடப் போகி றாய்? எந்தக் காலத்துப் பாஷன் ரவிக்கையம்மா போடப் போகிறாய்? கண்ணுக்கு மையுமிடுவையோ? ரவிக்கை என்கிற பேர்கூட இந்தக் காலத்தில் இருக்கிறதா? 'பாடி' என்றால் உனக்கு என்னவென்று தெரியுமா? மேலே உடுத் திக்கொண்டிருக்கிற 'ஸாரி'யை நீ பார்க்கிறாயே தவிர இன்னும் என்ன என்ன பெண்கள் போட்டுக் கொள்ளு கிறார்கள் என்று உனக்குத் தெரியுமா? அவர்கள் வைத் துக்கொண்டிருக்கும் உடுப்பு வகைகளை முன்னாடி உன் னைப் பார்க்க விடுவார்களா? ஒவ்வொன்றில் எத்தனை பொத்தான்கள் இருக்கின்றன, எவ்வளவு 'டேப்பு' பிடிக்கும் என்று உனக்குத் தெரியுமா?"

"எனக்கு அவைகளெல்லாம் ஒன்றும் தெரிய வேண்டாமடா அப்பா. அவளே தலைவாரிக் கொள்ளட் டும். அவளே உடுத்துக் கொள்ளட்டும். அவள் எப்படி வேண்டுமானாலும் இருக்கட்டும். உன் மனசுக்கு ஒத்த படி இருந்துவிட்டாளானால் அவ்வளவுதான் எனக்கும் வேண்டியது."

"அவளை வைத்துக்கொண்டு முன்னாடி அவள் அநா சாரத்தை நீ எப்படி ஸகித்துக்கொண்டிருப்பாய்? நம்மவர் கள் ஆசாரம் என்று அவர்களுக்கு என்ன தெரியும்? அவர்கள் வீட்டு ஆசாரந்தான் நமக்கு முன்னாடியே தெரிந்திருக்கிறதே!"

"உன் அநாசாரத்தை ஸகித்துக் கொண்டிருக்கி றேனே! அவள் அநாசாரத்தை நான் ஸகித்துக் கொண் டிருக்க முடியாதா?"

"ஏன் இவ்வளவு கஷ்டம் என்கிறேன். அதைத்தான் நான் யோசனை செய்கிறது. நான்தான் அவளைப் பெண் ஜாதியாய்க் கொண்டுவிட்டேன்; ஆசாரமோ அநாசார மோ, நல்லதோ கெட்டதோ, கஷ்டமோ நிஷ்டூரமோ, நம்மோடு போகட்டுமே, வீட்டிலிருப்பவர்கள் பேரில் அதைச் சுமத்துவானேன் என்று இப்பொழுது எனக்குத் தோன்றுகிறது."

"சுமத்துவானேயா? அப்படி என்றால் எனக்கு என்ன வென்று புரியவில்லை. என்ன பண்ண வேணு மென் கிறாய்?"

"நானும் அவளும் தனியாய் இருந்துவிட்டால்?"

துரைச்சா அதைச் சொன்னவுடனே என் சம்சாரத் துக்கு விஷயம் புரிந்துவிட்டதாம். கப்சிப் என்று வாயை மூடிக்கொண்டு விட்டாளாம்.

"நீங்கள் இருவருமாய்த் தனி சம்சாரம் பண்ணுகிறது என்கிறாயா? குசாலாய்ச் செய்யுங்களேன். உங்களுக்கு அதுதான் செளகரியமென்று பட்டால் பேஷாய்ச் செய்யுங் கள். எங்களுக்கு என்ன ஆக்ஷேபம்? நாங்கள் வேண்டுகிற தெல்லாம் நீங்கள் ஆயுசோடு க்ஷேமமாயும் சந்தோஷ மாயும் கஷ்டப்படாமலும் இருக்க வேண்டும் என்கிறது தான். அதைத் தவிர எங்களுக்கு என்னடா அப்பா ஆசை?"

"நான் இன்னும் ஒன்றும் அம்மாதிரி தீர்மானம் பண்ணிவிடவில்லை. அடுத்த தெருவில் ஒரு வீடுகூட இருக்கிறது. வரப்போக நம் வீட்டுக்கு ரொம்பக் கிட்டம். வாடகையும் அதிகம் இல்லை. எதற்கும் போகப் போகப் பார்க்கலாம். அந்தமாதிரி தனியாயிருந்தால் செளகரி

யமா யிருக்குமோ என்னமோ என்று மனசில் பட்டது உன்னிடத்தில் சொன்னேன். நாம் நினைக்கிறபடியே எல்லாம் ஆய்விடுகிறதா ?" என்றாளும்.

இதை எல்லாம் என் சம்சாரம் என்னிடத்தில் வந்து தனியாய்ச் சொன்னாள். எனக்கு ஆத்திரம் அடக்க முடியாமல் பொங்கிற்று.

"'இந்த வீட்டில் நாங்கள் இருக்கிறோம்; நீங்கள் எங்கேயாவது வேறு வீடு பார்த்துக் கொள்ளுங்கள்' என்று அவன் நம்மைச் சொல்லவில்லையோ? நீ பிள்ளை பெற்றிருக்கிற அழகுக்கு உனக்கு இதுவும் வேணும், இதற்கு மேலேயும் வேணும். இந்த வீட்டில் வந்து நம்மோடுகூட இருக்கிறதற்கு அந்த மகாராணியின் அந்தஸ்துக்கு லாயக்கில்லையாமோ ? 'இன்னொரு பெண்ணிருக்கிறதே, அதை நீ எப்படியாவது கல்யாணம் பண்ணிக் கொடுத்துக்கொள் ; இருக்கிற மற்றொரு பையனுக்கு நீ படிப்பாவது சொல்லி வை; இல்லாது எக்கேடாவது கெட்டுப் போகட்டும் ; நீங்கள் எப்படியாவது போங்கள்; நானும் என் பெண்ஜாதியும் குஷியாகவும் உல்லாஸமாகவும் இருக்கிறோம்' என்கிறானே? வளையலையும் சங்கிலியையும் வைத்து ஐம்பது ஐம்பதாகவும் நூறு நூறாகவும் அனுப்பினாயேடி ? உனக்கு வேண்டியது தான்! என்றைக்குத் தனி சம்சாரம் வைக்கப்போகிறானும்? அதற்கு இன்னொரு நாள் என்ன ? இன்றைக்கே வீட்டை விட்டுப் போகச்சொல்லு; கிளம்பச் சொல்லு. எனக்கு வருகிற பென்ஷனை ஒருத்தர் அடித்துக்கொண்டு போக முடியாதே? ஈசுவரன் இருக்கிறான். சாகிறேனோ பிழைத்திருக்கிறேனோ, நான் பார்த்துக்கொள்கிறேன். பெருமாள் விட்ட வழி யாகட்டும். இனி ஒரு நிமிஷம் அவன் இந்த வீட்டில் இருக்கக்கூடாது. கிளம்பச் சொல்" என்று கத்தினேன்.

"இரையாதீர்கள். அவன் காதில் விழப்போகிறது. குழந்தை மனசு கஷ்டப்பட்டுக் கொள்ளும்" என்ருள் என் சம்சாரம்.

# 10

## துரைராஜையங்கார்

நேற்றுவரையிலும் - இன்றைக்குங்கூட - அந்தத் துரைச்சாப் பயல் எங்களிடம் பணத்தாலேயும் காசாலேயும் உடம்பு கஷ்டத்தாலேயும் செய்துகொள்ள வேண்டியதை எல்லாம் செய்துகொண்டான்; இன்றைக்குப் பெண்ஜாதி என்று ஒருத்தி வந்தாளாம்; அவள் மிமாட்டித்தனத்துக்கும் சொகுஸுக்கும் எங்களோடு இருக்கச் சரிப்படாதாம்; 'நீங்கள் இருந்தால் இருங்கள், செத்தால் சாகுங்கள், எக்கேடாவது கெட்டுப் போங்கள்; நானும் என் பெண்ஜாதியும் தனிக்குடித்தனம் வைத்துக்கொண்டு மனம் போனபடி யெல்லாம் போகசுகங்களை அனுபவிக்கப் போகிறோம்' என்கிருனும். அந்த நன்றிகெட்ட பயலை முன்னடி வீட்டை விட்டு விரட்டு என்ருல், என் சம்சாரம் "கத்தாதீர்கள்" என்கிருள். அவன் காதில் விழுந்துவிடுமாம்! குழந்தை மனசு கஷ்டப்பட்டுக் கொள்ளுமாம்! "கொயந்தையைப் பார்க்கவில்லை கொயந்தையை!" நமக்கு மனக் கஷ்டம் ஏற்படுமே யென்று அந்த அயோக்கியப் பயல் நெஞ்சு நுனியிலாவது நினைத்தானு?

எனக்கு எரிச்சல் வந்தது.

"உனக்குச் சூடு சொரணை என்று ஏதாவது இருக்கிறதா?" என்று என் சம்சாரத்தைக் கேட்டேன்.

"இதில் சூடு என்ன, சொரணை என்ன? அததற்கு இறகு முளைத்தால், தானே பறந்து ஓடிப்போய் விடுகிறதுகள்" என்று வேதாந்தமாய்ப் பதில் சொன்ருள்.

"புருஷப் பக்ஷிக்குப் பெண்ஜாதி வந்தால் இறகு முளைத்து விட்டாப் போலேயோ?" என்று எடுப்பாய்ச் சொல்லிக்கொண்டே தெருப்பக்கம் வந்து விட்டேன். அந்த சமயத்தில் அங்கே துரைராஜையங்கார் வந்து சேர்ந்தார்.

"கந்தா, காலையிலே, காப்பிப் பாலில்லையே—
கையிலே காசுமில்லை கடன் கொடுப்பார் யாருமில்லை
—கந்தா"

என்று பாடிக்கொண்டே கையை விரித்து என்முன் அபிநயம் பிடித்துக் கூத்தாடினார்.

துரைராஜையங்கார் சுபாவமே அது. அவருக்கும் என் வயசு இருக்கும். வேடிக்கைப் பேச்சு என்னவோ அவரை இன்னும் விட்டு அகலவில்லை.

இருவரும் ஆரம்பம் முதல் ஒரே ஜில்லாவில் ஒரே இலாகாவில் வேலையாயிருந்தோம். அவருக்கும் அறுபது ரூபாய் பென்ஷன்தான். மாம்பலத்தில் அவரும் வீடு வாங்கியிருக்கிறார். அவருக்கு மூன்று பெண்கள், மூன்று பிள்ளைகள். பெண்களை எல்லாம் கல்யாணம் செய்து கொடுத்து விட்டார். பிள்ளைகளுக்கு வேலையாகி ஒவ்வொருவனும் தனித்தனியாய் இருந்து வருகிறான். என்னைப் போல் கல்யாணம் பண்ணவேண்டிய பெண்ணாவது, படிப்புச் சொல்லி வைக்கவேண்டிய பிள்ளையாவது அவருக்கு இல்லை. இன்னும் பத்துப் பிள்ளையும் பெண்ணும் இருந்தாற்கூட அவர் கொஞ்சமாவது கவலைப்படுகிற பேர்வழியும் அல்ல.

ரொம்பத் தமாஷ் பேர்வழி. எதைப் பார்த்தாலும் தமாஷ்தான்; யாராயிருந்தாலும் கிண்டல்தான்.

நாங்கள் உத்தியோகத்தில் இருக்கிற காலத்தில் ஒரு நாள் அவர் வீட்டுக்குப் போயிருந்தேன்.

"வாருங்கள், வாருங்கள்! உட்காருங்கள்! நல்ல சமயத்தில் தான் வந்தீர்கள். உங்களுக்கு இப்போது காப்பி வேணுமோ இல்லையோ?" என்றார்.

"வேண்டாம் ஸார்! இப்பொழுதுதான் சாப்பிட்டு விட்டு வருகிறேன்" என்றேன்.

"வேணும் என்று சொல்லுங்கள், ஸார். இல்லா விட்டால் கொஞ்சம் தீர்த்தமாவது கேளுங்களேன்!"

"தீர்த்தங்கூட இப்போது வேண்டாம், ஸார். என்ன விஷயம் சொல்லுங்களேன்" என்றேன். யாரையோ கிண்டலுக்கு ஆரம்பிக்கிறார் என்று நன்றாய்த் தெரிந்தது.

"என்ன விஷயம் என்கிறீர்களா? என் சம்சாரம் நாற்பத்திரண்டு ரூபாய் கொடுத்துப் புடைவை வாங்கிக் கொண்டிருக்கிறாள். இப்போது அதைக் கட்டிக்கொண்டு பக்கத்து உள்ளில் நின்றுகொண்டும் இருக்கிறாள். யாரும் அதை இன்னும் பார்க்கவில்லையே என்று துடித்துக்கொண்டிருக்கிறாள். நல்ல வேளையாய் நீங்கள் வந்துசேர்ந்தீர்கள். கொஞ்சம் காப்பியோ தீர்த்தமோ நீங்கள் கேட்டீர்களானால் அந்தச் சாக்கிலாவது புடைவையை உங்களுக்குக் காண்பித்துவிட்டுப் போவாள். மனசு நிம்மதியாய்ப் போய்விடும். கொஞ்சம் காப்பி கொண்டுவரச் சொல்லட்டுமா?" என்று அவர் சம்சாரம் காது கேட்கப் புரளி பண்ணினார். அவர் தமாஷாவுக்கு 'செக்கு இது, சிவலிங்கம் இது' என்கிற வித்தியாசமே கிடையாது. அந்தத் தோரணையிலேயே நாளது வரையில் வாழ்க்கையை நடத்தி வந்து விட்டார். எனக்கு வாயில் முக்கால் வாசிப் பல் போய்விட்டது. தலை வழுக்கை தட்டிவிட்டது. அவர் இந்த வயசிலும் உருளைக் கிழங்கு மாதிரி இருக்கிறார்.

"என்ன, ரொம்பக் குஷியில் இருக்கிறீர்கள், துரைராஜம்!" என்று சிரித்துக்கொண்டே கேட்டேன்.

"நமக்கு குஷியில்லாத சமயம் எப்போது ஸார்? எப்போதும் குஷிதான்.

கண்டோமடி சைதாப்பேட்டை-காணுது பார் பறங்கிமலை
வீண்டவாயை மூடுமுன்னே வந்தோமடி பல்லாவரம்
அடி அடியே—சொகுசாக் குந்தடி சோம்பல் விடடி-நன்னுனே"

என்று கை தட்டிக்கொண்டு தெம்மாங்கு பாட ஆரம்பித்துவிட்டார்.

"உம்! சுக புருஷன்" என்று பெருமூச்சு விட்டேன்.

"இல்லாமல் என்ன ஸார்? அது கிடக்கட்டும். மாட்டுப்பெண்ணை வீட்டுக்கு அழைத்துக் கொள்ளவில்லையா?" என்று கேட்டார்.

என் வயிற்றெரிச்சலை எல்லாம் உடனே அவரிடத்தில் அளந்து ஆற்றினேன்.

"இந்தப் பெண்டுகளுக்குப் புத்தி இருக்கிறதா ஸார்? "என்று என் சம்சாரத்தின்பேரில் எனக்கு ஏற்பட்டிருக்கும் வெறுப்பையும் கொட்டினேன்.

"தாய் மனம் பழம் பழுக்கும் விருக்ஷத்தைப் போன்றது, ஸார். 'வாருங்கள் வேண்டிய வரையில் இனிப்பாய்ச் சாப்பிடுங்கள்' என்று பரிந்து அழைக்கிற மாதிரி மரம் பழங்களோடு குலுங்குகிறது. அதற்கு மனுஷியன் என்ன பிரதியுபகாரம் செய்கிறான்? பழத்துக்காக அதன் மேல் கல்லை விட்டு எறிகிறான். பழக் காலத்தில் மரம் எவ்வளவு கல்லடி படுகிறது? இதை மனத்தில் வைத்துக் கொண்டு மரம் மறுபடி பழங்கொடுக்காமல் விட்டுவிடுகிறதா? அந்த மாதிரியானது தாய் மனம். குழந்தைகள் எந்த விதமான அக்கிரமங்கள் செய்தாலும் முகம் வாடாமல் அவைகளை ஸஹித்துக் கொண்டிருக்கும்படியான உன்னதமான குண ஸம்பத்தை ஈசுவரன் அவர்களுக்கு இயற்கையிலேயே கொடுத்திருக்கிறான் ஸார்! அது இருக்கட்டும். உங்களுக்குத்தான் என்ன? தனியாய் இருக்கப்

போகிறோம் என்று அவர்கள் சொன்னால் விட்டுத் தொலை யுங்களேன். எப்படியாவது கெட்டலைந்து போகிறான்."

"விட்டுத் தொலைக்கிறோம்; விடாமல் நாம் என்ன செய்கிறதற்கு இருக்கிறது? இந்தப் பசங்கள் நன்றியைப் பார்த்தீர்களே என்கிறேன். அதை நினைக்கும்பொழுது தான் எனக்கு ஆத்திரம் ஆத்திரமாய் வருகிறது" என் றேன்.

"விடுங்கோள், ஸார். யோசனை பண்ணிப் பார்த்தால் பிள்ளைகள் தனியாயிருந்தாலும் ஒன்றுதான்; கூட இருந் தாலும் ஒன்றுதான். நம்ம கஷ்டம் நம்மை எப்பொழு தும் விட்டதில்லை. அதுவும் உங்கள் சம்சாரத்திற்கு ஒரு நாளும் விடப்போகிறதில்லை. தனி சம்சாரத்தின் அழகை நான்தான் பார்க்கிறேனே: என் மூன்று பிள்ளைகளும் தனியாய்த்தான் இருக்கிறார்கள். எல்லோரும் மாம்பலத் திலேயே வட்ட மிட்டுக்கொண் டிருக்கிறார்கள். பெரிய சம்பளக்காரர்களா யிருந்தால் சமையற்காரன் என்று ஒருத்தன் இருப்பான்; நமக்குக் கஷ்டமிராது. இப்போது என்ன ஆகிறது என்கிறீர்கள்? ஒருத்தி ஒருத்தியாய் மூன்று மாட்டுப் பெண்களும் வீட்டுக்குத் தூரம். அப்போ எங்கே போகிறது? நம்ம வீட்டில்தான் குடும்பத் தோடு முகாம். இம்மாதிரி மாசத்தில் முக்கால் வாசி நாள் நம்ம வீட்டில்தான்.

அவர்கள் மாத்திரமா? தனி சம்சாரம் என்று ஏற்பட்டால் ஒவ்வொருத்தருக்கும் மச்சினன் மச்சினி என்று ஒன்றிரண்டு பேர் எப்படியாவது வந்து கூடி விடு வார்கள்.

"மச்சினன் இருக்கும் ஊரில் படிப்பு, சுத்த உபயோக மில்லாததா யிருக்கும். வாத்தியார்கள் ஒன்றுமே சொல்லிக் கொடுக்கமாட்டார்கள். பையன் நூற்றுக்கு மூணரை நாலுக்கு மேல் மார்க்கு வாங்குகிறதே யில்லை.

அவனை அகத்துக்காரி, பட்டணத்தில் கொண்டு வைத்துக் கொண்டு படிப்புச் சொல்லிவைத்து அவன் கண்ணைத் திறந்துவிட்டால்......இப்படி மைத்துனன் வந்து சேருவான்.

"மச்சினி இருக்கிற ஊரில் 'டான்ஸ்' சொல்லிவைக்கிறதற்கே ஒரு வாத்தியார் இல்லை. பெண் ரொம்ப நன்ருய் 'டான்ஸ்' ஆடுகிறதாக எல்லோரும் சொல்லுகிருர்கள். 'தையல் தைக்க வாருங்கள், தையலரே சிறுவரே; கையைச் சுத்த மாகவே காக்க வேணும் சிறுவரே' என்று ஒரு 'டான்ஸ்' பள்ளிக்கூடத்தில் சொல்லி வைத்திருக்கிருர்கள். அதை என்னமா ஆடுகிறது என்கிறீர்கள்? அவ்வளவு நன்ருய் ஆடுகிறது! யாராவது சென்னபட்டணத்தில் அழைத்துக் கொண்டுபோய் வைத்துக்கொண்டு ஒரு நல்ல வாத்தியாரை ஏற்படுத்தி 'டான்ஸ்' சொல்லிவைத்தால் அதற்கு ரொம்ப நன்ருய் வரும். ஏண்டி, நீதான் அவளை உன்னேடு வைத்துக்கொண்டு சொல்லி வைக்கக் கூடாதா? ........டான்ஸ் கற்றுக்கொள்ள மச்சினி வந்துசேருவாள்.

"பிள்ளையின் குடும்பம் நம்ம வீட்டுக்கு நாலு நாளைக்கு வந்து இருக்கிறது என்ருலும் இந்தப் பரிவாரங்களை எங்கு விட்டு விட்டு வருகிறது?"

"அது போருல் மாட்டுப்பெண் ஒவ்வொருத்தியாய் பிறந்தகத்துக்குப் பிரசவத்துக்குப் போகவேணும். பிரசவத்துக்கு மூன்று மாசங்களுக்கு முன்னே போய்விடுவாள். பிள்ளை பெற்று ஐந்துமாதங் கழித்து வருவாள். அதுவரையில் பிள்ளை தன் வீட்டைப் பூட்டிவிட்டு நம் வீட்டோடுதான் இருப்பான்.

"இதற்கு நடுவில் ஒரு மாட்டுப்பெண்ணுக்கு ஏதோ உடம்பு; கோஷா ஆஸ்பத்திரியில் படுத்துக்கொண்டால் தான் வாங்கும்; நம்ம சம்சாரம் ஆஸ்பத்திரிக்கும் வீட்டுக்குமாய் அலையவேண்டியதுதான். ராத்திரி ஆஸ்பத்

திரிலேயே படுத்துக்கொள்ள வேண்டியிருந்தாலும் இருக்கும். அதிலிருந்து நம்ம சம்சாரம், வந்துசேரும்பொழுது அவளையே கொண்டு ஆஸ்பத்திரியில் படுக்க வைக்கவேண்டிய நிலை வந்துவிடும்.

"அந்த மாதிரி, நம்ம கஷ்டம் நம்மை ஒருபொழுதும் விடாது என்கிறேன். பெண்ஜாதியும் தானும் சௌகரியமா யிருக்கிறவரையில் பிள்ளைகளுக்கு அப்பன் வேண்டியதில்லை; ஆத்தாள் வேண்டியதில்லை. ஒரு ஜுரம் தலைவலி என்று வந்தாலோ, அப்போது அம்மா வராமல் சரிப்படாது.

"சம்சாரம் என்றால் ஒன்று போனால் ஒன்று இப்படித்தான் இருக்கும். இருந்தாலும் அது அது போகிற வழியில் விடவேண்டியதுதான்" என்று துரைராஜம் பெரிய உலக தத்துவ உபந்யாஸம் ஒன்றைச் செய்தார். மனசில் கொஞ்சம் சமாதானம் ஏற்பட்டது.

"சரி அவன் போகிறதா யிருந்தால் போகட்டும்" என்று என் மனசை ஒருவாறு நிம்மதி செய்து கொண்டேன்.

## 11

## வீட்டிற்கு வந்தாள்

அப்புறம் துரைச்சா பெண்ஜாதியை வீட்டுக்கு அழைப்பதைப் பற்றி எங்களுக்குள் ஒரு பேச்சும் நடக்கவில்லை. எப்படியாவது போகிறான் என்று நான் இருந்துவிட்டேன். அவனாக என்ன சொல்லுகிறானோ சொல்லட்டும் என்று என் சம்சாரம் இருந்துவிட்டாள்போலும்!

இதற்குமுன் அரை நாழிகை கால் நாழிகையாவது துரைச்சா வீட்டில் தங்குவான். இப்பொழுது அதுகூட இல்லை, எங்கே போகிறானோ, எங்கே வருகிறானோ! இரவு பத்துமணிக்கு மேல் 'விர்' என்று அவன் மாமனார் வீட்டுக்

கார் தெருவில் வந்து நிற்கும். துரைச்சா அதிலிருந்து இறங்குவான்.

"நாளையதினம் சரியாக அஞ்சு மணிக்குக் காரை ஆபீஸண்டை கொண்டுவா. அஞ்சு மணி என்றால் சரியாய் அஞ்சு மணிக்கு வரவேணும். தெரியுமா?" என்று டிரைவருக்கு உத்தரவிட்டுவிட்டு உள்ளே வருவான்.

கார் படைத்திருக்கிற பெருமை அதிகாரம் பண்ணச் சொல்லுகிறது!

தட்டை எடுத்து வைத்து, "சாப்பிட வாயேண்டா" என்று அவன் தாய் கூப்பிட்டால், "நான் சாப்பிட்டு விட்டேன், அம்மா, சாயந்திரம் என் மாமனார் வீட்டுப் பக்கம் போயிருந்தேன்; அங்கே சாப்பிடச் சொன்னார்கள்; உட்கார்ந்து விட்டேன்" என்பான். அநேகமாக ஒவ்வொரு நாளும் இரவு சாப்பாடு மாமனார் வீட்டில்தான்.

காலையில் எழுந்ததும் பல் தேய்த்துக் காப்பி சாப்பிட்டுவிட்டுப் பைஸிகிளில் ஏறிக்கொண்டு போய்விடுவான்; மாமனார் வீட்டுக்குத்தான் இருக்கும். ஆபீஸ் வேளைக்குத் திரும்பி வந்து அவசர அவசரமாகச் சாப்பிட்டுவிட்டு ஆபீஸுக்கு ஓடுவான். சில நாள் வீட்டுக்கு வராமல் அப்படியே போனாலும் போய்விடுவான்.

இரண்டொரு தரம் துரைராஜையங்கார் அவனையும் செல்லத்தையும் ஸினிமாக் கொட்டகையில் பார்த்ததாகச் சொன்னார்.

"அந்தப் பெண் ரொம்ப அடக்கமான பெண்போல் தென்படுகிறது. நவநாகரிக பாஷன் அவளிடத்தில் ஒன்றும் தென்படவில்லை, ஸார். வைஷ்ணவர்கள் புடைவை தான் கட்டிக்கொண்டிருக்கிறது. இந்தக் காலத்துப் பெண்களைப்போல் ஒருவிதமான வேஷத்தையும் காணோம்" என்று சொன்னார்.

துரைச்சா மாமனார் வீட்டுப் பெருமையிலேயே மூழ்கிக் கிடந்தான். அவன் வந்தானா போனானா. எங்கே போகிறான். எப்பொழுது வருகிறான் என்று கவனிப்பதை நாங்களும் விட்டுவிட்டோம். நம் பிள்ளை நமக்கே அந்நியனைப்போ லாகிவிட்டான்.

ஒரு நாள் அவனாகத் தாயினிடத்தில் வந்து, " தனியாய் இருக்கலாமோ என்னமோ என்று யோசனை செய்கிறதாக முன்னே நான் உன்னிடத்தில் பிரஸ்தாபித்தேனே, அம்மா ; இப்போது அது இல்லை என்று தீர்மானித்துவிட்டேன் " என்றானும்.

" சரி " என்றாள் என் சம்சாரம்.

"ஏன் அப்படி?" என்று தாய் கேட்பாள் என்று எதிர்பார்த்தான். என் சம்சாரத்துக்கா தெரியாது ! அதற்கென்றுதான் ஏதோ சொல்ல வந்திருக்கிறானே, அது அவனாலேயே வெளிவரட்டுமே என்று என் சம்சாரம் பிகுவாய் இருந்துவிட்டாளாம்.

"முதலில், செல்லம் அதற்கு இஷ்டப்பட மாட்டேனென்கிறாள் " என்று ஆரம்பித்தானும். என் சம்சாரம் ஒன்றுமே பதில் சொல்லவில்லை.

"மாட்டுப்பெண் வீட்டுக்கு வந்தாள்; அகமுடையானைத் தாயார் தகப்பனாரை விட்டுப் பிரித்தாள் என்கிற அபவாதந்தானா முதலில் எனக்கு வேண்டும்?' என்று அவள் கேட்கிறாளம்மா" என்றான்.

என் சம்சாரம் மௌனமா யிருந்தாள்.

" இன்னும் என்ன என்ன பேசுகிறாள் தெரியுமா ?'

மௌனம்.

" என்னைத்தான் இத்தனை நாள் வைத்துக்கொண்டு காப்பாற்றினாள். நீ என்னமோ வீட்டு வேலையில் என் தாயாருக்கு உபயோகமா யிருக்கப் போகிறதில்லை. உன்னையும் அழைத்துக்கொண்டு உனக்கும் அவள் சிசுருஷை

செய்யும்படியாய் வைக்கிறது, நியாயமா?' என்று கேட்டேன்."

மௌனம்.

"'அதற்கு என்ன செய்கிறது? கண்ணைத் திறந்து கொண்டு கல்யாணம் செய்துகொண்டீர்கள்? அவர்களும் உதவாக்கரைப் பெண் என்று தெரிந்துதானே உங்களுக்குச் செய்துவைத்தார்கள்? என்னையும் வைத்துக்கொண்டு அவர்கள் சம்ரக்ஷிக்க வேண்டியதுதான். மாட்டேனென்றால் விடுமா? என்னைத் தனியாய் விட்டு விட்டால் வீட்டைப் பார்த்துக்கொள்ள எனக்கு என்ன தெரியும்? முன்னாடி உங்களுக்குக் காப்பி வைத்துக் கொடுத்துச் சாப்பாடு போட்டு அனுப்ப வேண்டுமே?' என்றாள். அந்தப் பெண் ரொம்ப விவேகமுடைய பெண், அம்மா. நல்ல புத்திசாலி. 'இரண்டுபேர் சாப்பாட்டுக் கென்ன? ஹோட்டலிலிருந்து வரவழைத்துவிட்டால் போகிறது' என்றேன். 'ஹோட்டல் சாப்பாடு எனக்குக் கொஞ்சங்கூட உடம்புக்கு ஒத்துக்கொள்ளாது. தனியா யிருக்கிறது என்றால் ஒரு சமயற்காரனைப் போட்டால்தான் முடியும்' என்றாள். 'அப்படித்தான் செய்துகொண்டால் போச்சு' என்று சொன்னேன்..."

என் சம்சாரத்துக்கு 'அசடே அசடே!' என்று சிரிப்பு வந்ததாம். ஆனாலும் வாயைத் திறக்காமல் மௌனமாகவே கேட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தாளாம்.

"அந்தப் பெண் 'உங்களுக்கு எழுபது ரூபாய் சம்பளமா, எழுநூறு ரூபாயா?' என்று கேட்டது, அம்மா! 'வீட்டு வாடகை முப்பது முப்பத்தைந்தாவது கொடுக்க வேணும். அதற்குக் குறைந்து வீடு வைத்துக்கொண்டால் நமக்கு சௌகரியப்படாது. சமையற்காரன் இருபது கேட்கிறானோ, இருபத்தைந்து கேட்கிறானோ! உங்களுக்கு ஆபீஸ் போய்வர டிபன் செலவு எல்லாம் பதினஞ்சு

இருபது ரூபாயாவது ஆகும். இதையெல்லாம் கொடுத்து விட்டு நாம் சாப்பிடாமல் இருந்துவிட்டால் போச்சுது' என்று என்னைத் தமாஷ் பண்ணினுள், அம்மா! அப்புறம் அவள் சொந்தச் செலவுக்கு மாதம் முப்பது நாற்பதாவது பிடிக்குமாம். வெளியில் போகிறதென்றுல் ஒரு கார் இல்லாமல் போக முடியாதாம், டாக்ஸியாவது அப்போது அப்போது வைத்துக்கொள்ள வேணுமாம். இந்த மாதிரி எல்லாம் பேசிற்று, அம்மா. அந்தப் பெண் எவ்வளவு புத்திசாலி என்று அப்பொழுதுதான் நினைத்துக் கொண் டேன்..."

இப்படித் துரைச்சா சொல்லிக்கொண்டிருக்கிற பொழுது என் சம்சாரம் ஒரு பதிலும் சொல்லாமல் உள்ளே எழுந்து போய்விட்டாளாம். பின்னுலேயே துரைச்சா பேசிக்கொண்டே தொடர்ந்துவந்தான்.

"எல்லாவற்றையும் சொல்லிவிட்டு, 'இதெல்லாம் எனக்கு என்ன தெரியும்? எனக்குத் தோன்றினதைச் சொன்னேன். உங்கள் இஷ்டம் எப்படியோ அப்படி நான் நடந்துகொள்ள வேண்டியவள். உங்களுக்கு எப்படிப் படுகிறதோ அப்படிச் செய்யுங்கள்' என்றுள். கடைசி யாய் ஒரு கேள்வி கேட்டேன். 'உனக்கு எல்லாரோடும் ஒரு குடும்பமாயிருக்கிறதற்கு ஆக்ஷேபமில்லையே?' என் றேன். 'எனக்கு என்ன ஆக்ஷேபம்?' என்றுள். தனியாப் போகிறதில்லை என்று தீர்மானம் செய்துவிட்டேன்" என்றுன்.

"சரி" என்றுள் என் சம்சாரம். அதற்குமேல் அவள் ஒன்றும் பேசவில்லை. அதையெல்லாம் என்னிடத்தில் சொல்லும்பொழுது, "இப்படியும் அசட்டுப் பிள்ளை இருக்குமா! அவன் பெண்ஜாதி பெருமையையும் புத்தி சாலித்தனத்தையும் எனக்குத் தெரியப்படுத்திக் கொள்ளு

கிறதாக அவன் எண்ணம்! அசடு! அசடு!'' என்று சொல்லிச் சிரித்தாள்.

"எங்கள் படுக்கை உள்ளைத் தவிர, அந்தப் பெண் படுக்கிறதற்கோ வீணை வாசிக்கிறதற்கோ ஓய்வெடுத்துக் கொள்ளுகிறதற்கோ நம்ம ஆத்தில் அவளுக்கு என்று ஒரு தனி ரூம் விட்டுவிட வேண்டும், அம்மா!''

"அப்படியே செய்யேன், அப்பா. யார் வேண்டாம் என்கிறுர்கள்? ஹாலில் இருக்கிற இரண்டு ரூம்களில் ஒன்றை அவளுக்கென்றே விட்டுவிடேன்" என்று என் சம்சாரம் பதில் சொன்னுள்.

கடைசியில் அந்தப் பெண் நம் வீட்டிற்கே வந்து சேர்ந்தாள். ருது சாந்தி முகூர்த்தம் என்று ஒன்றும் செய்யவில்லை. செய்யவேண்டிய வண்ணம் வரிசைகளையெல் லாம் நன்ருகவே செய்து ஒரு நாள் அந்தப் பெண்ணை நம் வீட்டில் கொண்டுவந்து விட்டுவிட்டார்கள்.

லக்ஷணமாய் வைஷ்ணவர்கள் புடைவையைக் கட்டிக் கொண்டு சொர்ண விக்கிரகம் மாதிரி அந்தப் பெண் வந்து சேர்ந்தாள். வெகு அடக்கமாய் என்னையும் என் சம்சாரத் தையும் வந்து நமஸ்காரம் பண்ணிஞள். அவள் முகத்தைப் பார்க்கும்பொழுதே என்னை யறியாமல் எனக்கு ஒரு மகத் தான திருப்தியும் சந்தோஷமும் ஏற்பட்டன. மஹாலக்ஷ்மி நம் வீட்டில் அடி வைத்துவிட்ட மாதிரி எனக்குத் தோன் றிற்று. 'என்ன அழகு! என்ன அடக்கம்!' என்று என் மனம் பூரித்தது. அகத்தின் அழகு முகத்தில் பிரதிபலித் துக் கொண்டிருந்தது.

அன்றைத் தினம் ரொம்பவும் மருட்சி யடைந்திருக் கிறவள்போல் செல்வம் தென்பட்டாள். சமையல் உள்ளை விட்டு வெளி வரவே இல்லை. "உட்கார்ந்து கொள் ளேண்டி, அம்மா" என்று என் சம்சாரம் எத்தனையோ

தரம் சொன்னாள். வெட்கப் பட்டுக்கொண்டு அங்கும் இங்கும் நின்றுகொண்டிருந்தாள்.

துரைச்சா சாப்பிட்டுவிட்டுப் போனவுடன் சொல்லாமலே பர பர வென்று அவன் தட்டை எடுத்துக்கொண்டு போய் அலம்பினாள். எச்சிலைகளைத் தெருவில் கொண்டு போட்டு விட்டு எச்சிலைத் துடைத்தாள். மத்தியான்னம் வெந்நீர் அறைக்குப் போய் வெந்நீர்த் தவலையைப் பளபள வென்று சுத்தி செய்து வெந்நீர் உள்ளேயும் தண்ணீர் கொட்டித் தேய்த்து அலம்பினாள்.

"அதை எல்லாம் நீ ஒன்றும் செய்ய வேண்டாண்டி. நான் பார்த்துக் கொள்ளுகிறேன்" என்று என் சம்சாரம் அடிக்கொரு தரம் சொன்னாள். செல்லம் கேட்கவில்லை.

மறுநாள் காலையில் ஐந்தரை மணிக்கெல்லாம் எழுந்து வந்து வெந்நீர் அடுப்பை மூட்டிவிட்டு, சமையலறை அடுப்பை மெழுகிக் கோலம் போட்டாள்.

என் சம்சாரத்துக்குப் பெருமை பிடிபடவில்லை. 'நம்ம அதிருஷ்டந்தான் இந்தப் பெண் நமக்குக் கிடைத்தது' என்று செல்லத்தின் குணத்தையும் காரியம் செய்யும் திறமையையும் சொல்லி மாளவில்லை என் சம்சாரத்துக்கு.

மறுநாள் சாயந்திரம், "ராத்திரி சமையலை நான் பண்ணுகிறேன், அம்மா" என்றாளாம் செல்லம்.

"ஒன்றும் வேண்டாமடி. நான் இருக்கும்பொழுது நீ என்னத்துக்கடி பண்ணவேணும்? வேண்டாம்" என்றாள் என் சம்சாரம்.

அதைக் கேட்காமல் அவள் அடுப்பை மூட்டிச் சமையல் செய்ய ஆரம்பித்துவிட்டாள்.

சமையல் என்றாலும், எவ்வளவு நன்றாயிருந்தது! எங்களுக்கே ஆச்சரியமாய்ப் போய்விட்டது.

துரைச்சா சாப்பிடும்போது, "உன் பெண்டாட்டி சமையல்டா. என்னமாய்ப் பண்ணியிருக்கிறாள் என்று

சாப்பிட்டுப் பார்" என்று என் சம்சாரம் பெருமையாய்ச் சொன்னுள்.

" தமாஷ் பண்ணுகிருயோ? சமையல் என்ன தெரியும் அவளுக்கு? இவ்வளவு நன்ருய்க்கூட அவள் சமைத்து விட்டாளோ?" என்று அவன் எவ்வளவு சொன்னுலும் நம்பவே இல்லை.

# 12

## செல்லத்தின் கிண்டல்கள்

செல்லம் நம் வீட்டுக்கு வந்து இரண்டு மூன்று வாரங்கள் வரையில் எப்படிச் செய்தால் என்ன நினைத்துக் கொள் வார்களோ என்று, அச்சத்துடன் இருக்கிற மாதிரி நடந்து கொண்டாள். அதிகமாகப் பேசுகிறதில்லை. கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லுவாள்; தானுக ஒன்றும் பேச மாட்டாள். மாமியார் ரீதி குணம் எப்படி, மாமனுர் ரீதி எப்படி, புருஷன் போக்கு என்ன என்கிற நிலவரத்தை அறிவதில் இருந்தாள்போலும்! ஆனுல் எப்பொழுதும் முகத்தில் புன்சிரிப்புடன் வீட்டு வேலையை மேல்விழுந்து செய்துகொண்டு வந்தாள். இரா வேளைச் சமையல் அவளதுதான்.

"என்ன அம்மா தளிகை பண்ணுகிறது?" என்று மாமியாரைக் கேட்பாள். மாமியார் சொன்னுல், "கத் தரிக்காய் எல்லாவற்றையும் திருத்திப் போட்டு விடட் டுமா? கொஞ்சம் மிச்சம் வைத்துவிடுகிறதா?" என்று கேட்டு, சொல்லுகிறபடி செய்வாள். எதையும் மாமி யாரைக் கேட்டு உத்தரவு வாங்கிக்கொள்ளாமல் செய்ய மாட்டாள்.

சற்றுப் பழகினவுடன் தைரியம் பிறந்தது.

"தளிகையோ வீட்டு வேலையோ நீங்கள் இனிமேல் ஒன்றும் செய்யக்கூடாதம்மா; எல்லாம் நான்தான் செய்வேன். மாமனுரைக் கவனித்துக்கொண்டு நீங்கள் உடம்பு அசங்காமல் இருக்க வேணும். அவ்வளவுதான் உங்கள் வேலை" என்று மாமியாரிடம் சொன்னுள்.

"எனக்கென்னடி இப்போது வந்துவிட்டது? என்னுல் வேலை செய்ய முடியாதா?"

"முடியாது என்று சொல்லவில்லை அம்மா. நான் ஒரு குந்தாணி மாதிரி இருக்கும்போது நீங்கள் எதுக்காகச் செய்யவேணும் என்கிறேன். இத்தனை காலந் தான் பிள்ளை பெண்களை எல்லாம் பெற்று வளர்த்து வேண்டியவரையில் உடம்பால் உழைத்தாயிற்றே! இன்னும் என்ன? உங்களை நாங்கள் உட்கார வைத்து உபசாரம் செய்யவேண்டிய காலம் இது. அப்படிச் செய்தால் தான் எங்களுக்குக் கீர்த்தி, க்ஷேமம். அது செய்ய நாங்கள் கொடுத்துவைக்க வேணுமே அம்மா!" என்று உள்ளும் புறமும் ஒத்த தொனியில் செல்லம் சொன்னுள்.

"இப்படிச் சொல்லுகிறவாள் எனக்கு யாருடி இருக்கா அம்மா? நீயும் உன் ஆமடையானும் க்ஷேமமாய், தீருக்காயுசாய் இருக்கவேணும். அவ்வளவுதான் நான் கோருவது. துரைச்சாவுக்குக் கிடைக்கத்தகாத ஆமடையாள் நீ கிடைத்திருக்கிருய்" என்று பெண் மக்கள் சுபாவத்தை ஒட்டி என் சம்சாரம் கண்ணுல் ஜலமும் விட்டாள்.

மறுநாள் காலையில் என் சம்சாரம் சமையலுக்கு அடுப்பு மூட்டப் போனபோது, "ஏனம்மா, வந்தீர்கள்? நான்தான் உங்களை வரக்கூடாது என்றேனே?" என்று வேடிக்கையாய்ப் பேசுகிறவள் மாதிரி செல்லம் சொன்னுள்.

"நான் வரவே இல்லையடியம்மா. இதோ போய்விட்டேன், இதோ போய்விட்டேன். இந்தத் திக்கில் கூட இனி எட்டிப் பார்க்கிறதில்லை; சரிதானே?" என்று சொல்லிக்கொண்டே என் சம்சாரம் வெளி வந்து விட்டாள்.

அவளுக்கு மாட்டுப்பெண் பெருமை பிடிபடவில்லை. "உங்கள் மாட்டுப்பெண் என்னைத் தளிகை பண்ணுகிற உள்ளுக்குள்ளேயே காலை வைக்கக் கூடாது என்று விரட்டியடிக்கிறாள். 'சரிடியம்மா' என்று வந்து விட்டேன்" என்று உள்ளத்தில் பொங்கும் ஆனந்தத்தோடு என்னிடம் வந்து சொன்னாள்.

"உன் பாடு ஜோர்தான். உனக்கென்ன அம்மா குறைச்சல்! இனி நீ கால்மேல் கால் போட்டு உட்கார்ந்து கொண்டிருப்பாய், உனக்கு அப்பேர்ப்பட்ட மாட்டுப் பெண் கிடைத்துவிட்டாள். இனி நம்மைக்கூட நீ எங்கே கவனிக்கப் போகிறாய்?" என்று எனக்கு ஏற்பட்ட பெருமையையும் நான் வெளியிட்டேன்.

இரண்டு மூன்று மாதங்களில் வீடு கல கலவென்றாகி சிரிப்பும் சந்தோஷமும் ஆனந்தக் கூத்துமாய் விட்டது. பிறந்தது முதல் இந்த வீட்டிலேயே எங்களோடு வளர்ந்தவள்போல் ஆய்விட்டாள் செல்லம். "அதை ஏன் அப்பா செய்தாய்? இதை ஏன் அப்பா செய்யமாட்டேனென்கிறாய்? நீ எப்பொழுதும் இப்படித்தான் அப்பா" என்று வீட்டில் பிறந்த பெண் கொஞ்சுவதைப்போல், செல்லத்துக்கும் வீட்டில் சுவாதீன நிலைமை ஏற்பட்டு விட்டது. என்ன பரிகாசம் பண்ணுவாள்! என்ன மனோகரமான கிண்டல்கள்!

"மாமனார் ஏன் அம்மா க்ஷவரம் பண்ணிக்கொள்ளாமல் தீக்ஷை வளர்க்கிறார்? நீங்கள் ஏதாவது உண்டாயிருக்கிறீர்களா என்ன? க்ஷவரம் பண்ணிக்கொள்ளச் சொல்லு

கிறதுதானே?" என்று மாமியாரிடத்தில் என்னைப்பற்றிப் பரிகாசம் செய்வாள்.

"பெத்துப் பட்டதெல்லாம் எனக்குப் போராதா அம்மா? இது வேறு நீ கொண்டுவந்து வைக்கிருயா எனக்கு?" என்று சொல்லிக்கொண்டே மாட்டுப்பெண் சமர்த்தை என்னோடு கலந்து அனுபவிப்பதற்காக என் சம்சாரம் என்னிடத்தில் ஓடிவருவாள்.

"மாட்டுப்பெண் உங்களைப் பரிகாசம் செய்கிருளே; ஏன் க்ஷவரம் பணணிக்கொள்ளாமல் தாடி வளர்க்கிருர் என்று கேட்கிருளே. நீ உண்டாயிருக்கையா என்ன என்று என்னைக் கேட்கிருள்!"

ஹா ஹா ஹா என்று ஒரு சிரிப்பு சிரித்தேன்.

"அதையும் நீ செய்யமாட்டாயா என்ன? நீ என்ன லேசுப்பட்டவளா?" என்று அவளை ஓர் ஒய்யாரப் பார்வை பார்த்தேன். வீடு சந்தோஷமா யிருந்தால் நம் புத்தியிலும் ஒரு விகாரம் ஏற்படும். வயசானுலும் நாங்கள் மாத்திரம் அகமுடையான் பெண்டாட்டி அல்லவா?

இதுமுதல் வீட்டில் செல்லத்தைக் கேட்காமல் ஒன்றும் நடக்கிறதில்லே.

"ஏண்டி செல்லம்! முறுக்குப் பிழிவதற்கு அரைப் படி மா பிசையட்டுமா? முக்கால் படி போடட்டுமா?"

"அரைப் படி போதும் அம்மா. நாளைக்கே ஸ்ரீஜயந்தி வருகிறது; அன்றைக்கு வேறு பண்ணப் போகிருேம். இன்றைக்கு அரைப்படி பிசையுங்கள் போதும்"

"வெயில் நன்ருய்க் காய்கிறதடி செல்லம்!"

"மாமனுரைப் போய் ஒரு பூசனிக்காய் வாங்கிக் கொண்டு வரச் சொல்லுங்களேன்; வற்றல் போட்டு வைத்துக்கொண்டால் இரண்டு மாசம் தள்ளும்."

"ஏண்டி செல்லம்! கத்தரிக்காய் வாசலில் விற்கிறது; வாங்கட்டுமாடி?"

"என்ன விலை சொல்லுகிறான்?"

"வீசை கால் ரூபாய் சொல்லுகிறான்."

"மூணணுவுக்குக் கேளுங்கள்."

"கொடுக்கமாட்டேன் என்கிறாண்டி!"

"மூணரையணுவுக்குக் கேளுங்கள். கொடுத்தால் ஒரு வீசை வாங்கிப் போடுங்கள். ஒரு வேளை குழம்பு, ஒரு வேளை கறியமுது பண்ணலாம்."

"ஏண்டி! அவாத்து உபநயனத்துக்குப் போகவேணுமே; பட்டுத்துணி ஒன்று வாங்கி ஆசீர்வாதம் பண்ணலாமா? வெள்ளியில் ஏதாவது ஒன்றை வாங்கிச் செய்து விடலாமா? செல்லம் என்ன சொல்லுகிறாள், கேளேன்' என்று நான் சொல்லுவேன்.

"பட்டு வேண்டாம், அம்மா, ஆறேழு ரூபாயில் ஒரு வெள்ளி டம்ளர் வாங்கிப் பண்ணிவிடச் சொல்லுங்கள் அவ்வளவு என்ன? ஐந்து ரூபாய் பணமாய் ஓதிவைத்து விடச் சொல்லுங்களேன்?"

"பணமாய்ப் பண்ணிவிடலாம் என்கிறாளோ? அவள் சொல்வது ரொம்ப சரி. அப்படியே செய்து விடுகிறேன்."

எதுவானாலும் செல்லம் 'ஸாங்ஷன்' ஆனால்தான்!

செல்லம் துரைச்சாவைத் தினம் எல்லோர் எதிரிலும் கோட்டா பண்ணுகிறது இருக்கிறதே, அது சொல்லத் தரமன்று.

புதிதாய்ப் பெண்ஜாதி வந்தாலே பசங்களுக்குக் கொஞ்ச நாள் அசடு வழியும். ஒன்றோடொன்று ஓரைக் கண்ணால் பார்த்துக்கொள்ளும்; கண்ணடிக்கும், முணு

மூனு என்று பேசிக்கொள்ளும்; ஒன்றன் பின்னல் ஒன்று துணியைப் பிடித்துக்கொண்டு சுற்றிக் கொண்டே யிருக்கும். தீர்த்தம் சாப்பிடப்போகிற பாவனையாய் இவன் சமையலுள்ளே போய்க் கொஞ்ச நாழிகை இளிப்பான். காப்பி கொண்டுகொடுக்கிற மாதிரி அந்தப் பெண் இவன் அறைக்கு ஓடும். பெண்ஜாதி கொண்டுவந்த காப்பி என்றால் அதைக் குடித்தாகிறதற்கு முக்கால் மணி, ஒரு மணி நேரமாவது ஆகும். இந்தமாதிரி எவ்வளவோ! ஒருவரும் இவைகளைக் கண்டுகொள்ள மாட்டார்கள் என்பது அவர்கள் எண்ணம். போகட்டும், சிறிசுகள் அப்படித்தான் இருக்கும்.

துரைச்சாவிடத்தில் அந்த மறைவிடங்கூடக் கிடையாது. வீட்டில் இருக்கும்போது, 'செல்லம், செல்லம்' என்று அவள் பின்னலேயே சுற்றிக்கொண்டிருப்பான். விளையாட்டெல்லாம் நாலுபேர் முன்னல்தான். பழங் காலத்தை ஒழித்து நவ நாகரிகத்தில் வந்துவிட்டவனுகக் காட்டிக்கொள்ளுகிருன் என்று அர்த்தம்.

இண்டர்மீடியேட் தேறிவிட்டு இங்கிலீஷ் நன்ருய்ப் படித்த பெண்ஜாதியாய் அவனுக்குக் கிடைத்து விட்டாளா, அந்தப் பெருமை தாங்கவில்லை! அவளிடத்தில் இங்கிலீஷிலேயேதான் பேசுவான். அந்தப் பெண் என்னவோ நம் வீட்டுக்கு வந்து ஓர் இங்கிலீஷ் வார்த்தை சொல்லி நாங்கள் காதில் கேட்கவில்லை.

சமயலறைக்குள் வந்து செல்லம் குழம்புக்குப் புளி கரைத்துக்கொண்டிருந்தால், "செல்லம், ஹொயர் இஸ் மதர்? (அம்மா எங்கே?)" என்று கேட்பான். செல்லம் தலை நிமிர்ந்துகூடப் பார்க்கமாட்டாள்.

"ஆர் யூ டெப்? ஹொயர் இஸ் மதர்?" (காது செவிடா? அம்மா எங்கே?)

பதில் இல்லை,

"ஏய்!" என்று தலைப்பின்னலைப் பிடித்து இழுப்பான்.

"சற்று விலகி நில்லுங்கள். மாமனார் பெருமாளுக்கு ஆராதனம் பண்ணி அமுது செய்யப் பண்ணவேணும். விழுப்போடு தொட்டுவைக்காதீர்கள். கொஞ்சம் தூரவே நிற்கிறதாயிருக்கட்டும்."

"ஓ! ஆல் ரைட், ஆல் ரைட். (சரி, சரி) ஹொயர் இஸ் மதர்?"

"கொல்லைப்பக்கம் போயிருக்கிறார் போலிருக்கிறது."

அதற்குள் தாய் வருகிறாள். "மதர்! ஐ வாண்ட் டு டேக் ஆயில் பாத் அட் நைன்ஓ க்ளாக்!" (அம்மா நான் ஒன்பது மணிக்கு எண்ணெய் தேய்த்து ஸ்நானம் பண்ண வேணும்.)

"என்னடா ளொள், ளொள்?"

"ஐ — வாண்ட் — டு — டேக் — ஆயில் பாத் — அட் — நைன் — ஓ க்ளாக் — டூ — யூ — அண்டர்ஸ்டாண்ட்?" (உனக்குப் புரிகிறதா?)

பெண் ஜாதி எதிரில் இருக்கும்போது ஜோர் கிளம்புகிறதற்கு என்ன! அசடு வழிந்து ஓடாதா!

"கற்ற வித்தையைப் பெற்ற தாய்கிட்டக் காண்பிக்கிறான்! என்னடி அவன் குலைக்கிறான், செல்லம்?"

"என்னமோ, பெரிய இங்கிலீஷாய் இருக்கிறது அம்மா; எனக்கும் புரியவில்லை" என்றாள் செல்லம் கிண்டலாய்.

"புரியவில்லை! ஏ ஏ! அம்மா, நான் ஓம்பத் மண்கி எண்ணெ — டேய்ட்டுக் — கொல்ல — போகிறேன்" என்று பாதிரி தமிழ் பேசுகிறமாதிரி விளக்கினான்.

"எனக்கு ஒன்றும் தெரியவில்லை யப்பா" என்று அம்மா கிளம்பினுள்.

"அது தமிழ்தானம்மா. ரொம்ப இங்கிலீஷ் படித்து விட்டால் தமிழ் பேசும் பொழுதுகூட வாய் கோணக் கோண இழுக்கும்" என்றுள் செல்லம்.

"என்னைப் பரிகாசம் பண்றே! ஏ ஏ! கபர்தார்!" என்று கத்தி முஷ்டியை குலுக்கி மூக்கை உடைக்கப் போகிறமாதிரி சைகை செய்தான்.

"பரிகாசம் என்ன? வாஸ்தவத்தைத்தானே சொல்லு கிறேன்? உங்கள் வாய் இப்போது கோணக்கோண இழுக்கவில்லையா? நீங்களே சொல்லுங்களேன்."

"நானே சொல்கிறதா? சமயம் இருக்கிறது, இரு. இரு; உன்னைப் பார்த்துக்கொள்கிறேன். வட்டியும் முதலுமாய்ப் பார்த்துக் கொள்கிறேன்" என்று குஷி கிளம்பிப் போய்க் கறுவினுன்.

"இதற்குத்தான் சிருங்கார லீலை, காதலர் ஸல்லாபம் என்று பேர்போலிருக்கிறது!"

"இவளுக்கு உன்னாலதான் அம்மா இவ்வளவு வாய் ஏற்பட்டு விட்டது. மாட்டுப்பெண் என்றுல் அவளை நீ அடக்கியாளவேண்டாமா?"

"அடக்கியாளுவதற்கு என்றுதான் நீ ஏற்பட்டிருக் கிருயே; அடக்கியாளேன்."

"அவன் அல்லவா அம்மா என்னை அடக்கியாள்கி றேன் என்கிருள்!"

"நீ இளிச்சவாயனு யிருந்தால் செய்கிருள்."

துரைச்சாவுக்குப் பெருமை உச்சந் தலைக்குமேல் ஏறிவிட்டது.

# 13

## கண்ணுக்குக் கண்

நானும் என் சம்சாரமும் மாத்திரந்தானா செல்லத்தின் அன்புக்கும் நல்ல குணத்துக்கும் கட்டுப்பட்டு விட்டோம்! எங்களுடைய மற்றொரு பிள்ளை வாசுவும், பெண் பட்டுக்குட்டியும் அப்படியே.

வாசுவுக்கு வயசு பதினான்கு; ஐந்தாவது பாரத்தில் வாசிக்கிறான். பட்டுக்குட்டிக்குப் பன்னிரண்டு வயசு; மூன்றாவது பாரம். இரண்டு பேரும் முதலில் மதனியிடத்தில் கொஞ்சம் வெட்கப்பட்டுக் கொண்டிருந்தார்கள். இப்போது எதற்கெடுத்தாலும் மதனி யிடத்தில்தான் சிபாரிசுக்குப் போகிறது.

சாயந்தரம் பள்ளிக்கூடத்திலிருந்து வந்ததும் புஸ்தகம், நோட்டுப் புஸ்தகம் எல்லாவற்றையும் எறிந்துவிட்டு மதனியிடத்தில் ஓடுவார்கள்.

“இன்றைக்கு என்ன நடந்தது தெரியுமா, மன்னி? பள்ளிக்கூடத்தில் ஒரு பையன் இருந்தாப் போலிருந்து மூர்ச்சையாய்க் கீழே விழுந்துவிட்டான். பேச்சு மூச்சு இல்லாமற் போயிட்டது; எல்லோரும் பயந்துவிட்டார்கள். நடுக் கிளாஸில், மன்னி! ஹெட்மாஸ்டர் கிளாஸுக்கு ஓடிவந்தார். அவனைக் கட்டைமாதிரி நீட்டிக்கிடக்கிறது. பசங்களெல்லாம் அவனைச் சுற்றிக்கொண்டு விட்டதுகள். ஹெட்மாஸ்டர் வந்து பசங்களை யெல்லாம் அவனவன் இடத்திலே போய் உட்காரும்படி விரட்டினார். போறதுகளா என்ன! சுற்றிக்கொண்டே இருந்ததுகள். அப்புறம் எல்லோரையும் விரட்டியடித்து அந்தப் பையனைத் தூக்கி ஒரு வண்டியில் போட்டுக்கொண்டு போய்விட்டார்கள்” என்று பெரிய கத்தல் போட்டுக்கொண்டு சொல்லுவான்.

"அந்தப் பையனுக்கு இப்போது என்னமா யிருக்கிறதாம்?"

"அந்தப் பையனுக்கு ஒன்றுமே இல்லை, மன்னி. வெறும் டக்கு! பாசாங்கு பண்ணினான். இந்தமாதிரி பண்ணப்போகிறேன் என்று காலையிலேயே ரகுராமன் என்ற ஒரு பையனிடத்தில் சொன்னானும். திருட்டுப் பையன், மன்னி. எல்லோரும் ஏமாந்தார்கள்" என்று சொல்லி இடி இடி என்று சிரித்துவிட்டு, "தின்கிறதற்கு ஏதாவது இருக்கிறதா மன்னி?" என்று கெஞ்சுவான்.

"அலமாரியில் இரண்டு மாம்பழம் வைத்திருக்கிறேன். பட்டுக்குட்டியும் நீரும் ஆளுக்கு ஒன்று எடுத்துக்கொள்ளுங்கள்" என்பாள் செல்லம். (மைத்துனன் எவ்வளவு சின்னப் பிள்ளையாயிருந்தாலும் மரியாதையாய்க் கூப்பிட வேண்டும் என்கிறது ஸம்பிரதாயம்!)

"மாம்பழந்தானா, மன்னி?"

"இன்னும் என்ன வேணும்?"

"பக்ஷணம் ஏதாவது இல்லையா, மன்னி?"

"இன்றைக்குப் பக்ஷணம் ஒன்றும் இல்லை. மாம்பழத்தைச் சாப்பிட்டுவிட்டு வாருங்கள். இப்போது வற்றல் வறுக்கப்போகிறேன், கொடுக்கிறேன்" என்பாள் செல்லம்.

எது வேண்டுமானாலும், தாயைக் கேட்கிறது என்பது விட்டுப் போய் விட்டது. அவர்கள் எதற்கெடுத்தாலும் மதனியிடத்தில்தான் ஓடுவார்கள். அவர்களுடைய சந்தோஷமோ துக்கமோ பெருமையோ எல்லாம் மதனியிடத்தில்தான்.

"கணக்கில் இன்றைக்கு எனக்கு எத்தனை மார்க்கு சொல்லு, மன்னி?"

"எத்தனையோ! எத்தனை?"

"நீ சொல்லு பார்க்கலாம்!"

"நூற்றுக்கு அறுபதாவது வாங்கியிருப்பாய்!"

"இல்லை."

"அறுபத்தைந்தா?"

"இல்லை."

"மும்பத்தேழா?"

"இல்லை; முப்பத்தேழா!"

"பின்னே எவ்வளவு?"

"நீ சொல்லேன்."

"எனக்குத்தான் தெரியவில்லையே!"

"எண்பத்தொன்பது, மன்னி! நான்தான் கிளாஸில் முதல், மன்னி. என்னை என்னவென்று நினைத்துவிட்டாய்?" என்று பெருமை அடித்துக்கொள்வான்.

மதனியின் மனம் கோணாமல் நடந்துகொள்ள வேண்டுமென்று பசங்களுக் கெல்லாம் உற்சாகம் கிளம்பி விட்டது.

செல்வம் சமையல் பண்ணிக் கொண்டிருக்கும் பொழுது கூட இரண்டு பேர்களும் அவளை விட்டுப் போக மாட்டார்கள்.

"ஏதாவது கதை சொல்லேன், மன்னி" என்று கேட்பார்கள்.

அவள் "அக்பர் என்று ஓர் அரசன் இருந்தான். அவன் ரொம்ப நல்லவன்..." என்று கதையாகவே சொல்லி இந்து தேச சரித்திரம் முழுவதையும் அவர்களுக்குச் சொல்லிவைத்து விட்டாள்.

பள்ளிக்கூடத்தில் வாத்தியார் பாடமாக இவைகளைச் சொல்லிவைக்கிறார்; அவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. கதையாய்க் கேட்கவே அவர்களுக்கு இவைகள் ரொம்ப ஸ்வாரஸ்யமாய்ப் போய்விட்டன.

"மன்னி என்ன நன்ருய்ச் சொல்லுகிருள், அப்பா அவள் சொல்லிக்கொடுத்தால்தான் எங்களுக்கு நன்ருய் வருகிறது. ஒரு கஷ்டமும் இல்லாமல் தெரிந்து விடுகிறதப்பா" என்று குழந்தைகளுக்கு மன்னியின் புகழைச் சொல்லி மாளவில்லை. எதையும் கதைரூபமாகக் காதால் கேட்கிற அளவு புஸ்தகத்தை எடுத்துப் படிக்கிறதில் வருமா?

செல்லம் வந்த இரண்டு மாதத்திற்குள்ளேயே அவர்களுக்குச் சொல்லிக்கொடுத்துக் கொண்டிருந்த 'ப்ரைவேட்' வாத்தியாரை நிறுத்திவிட்டோம்.

"ஏதுக்காக 'ப்ரைவேட்' வாத்தியாருக்கு வீணுக்குப் பத்து ரூபாய் கொடுக்கிறது? அவர்கள் பாடத்தைத் தினம் நான் சொல்லிக்கொடுத்து விடுகிறேன், ஏன் வாசு? உமக்கு நான் சொல்லிக்கொடுத்தால் போருமோ, இல்லையோ?" என்று செல்லம் கேட்டாள்.

"எனக்கு மன்னி சொல்லுகிறதுதானப்பா நன்ருய்ப் புரிகிறது. 'ப்ரைவேட்' வாத்தியார் மன்னியவ்வளவு நன்ருய்ச் சொல்லிக் கொடுக்கவில்லை அப்பா, மன்னியையே 'ப்ரைவேட்' சொல்லிக் கொடுக்கச் சொல்லப்பா" என்ருன் வாசு.

"அதெல்லாம் சரிதாண்டி, உனக்கெங்கேடி ஒழிவு? வீட்டு வேலையையும் என்னைச் செய்ய விடமாட்டேனென்கிருய்........"

"ஒழிவுக்கு என்ன அம்மா? சாயந்தரமெல்லாம் என்ன செய்கிறேன்? சும்மாத்தானே உட்கார்ந்திருக்கிறேன்? அப்போது சொல்லிக் கொடுக்கிறேன். அதெல்லாம் ஒரு கஷ்டமும் இல்லையம்மா" என்று சொல்லி. 'ப்ரைவேட்' வாத்தியாரையும் நிறுத்திவிட்டாள். அப்புறம் இருபத்து நான்கு மணிநேரமும் 'ப்ரைவேட்' தான்.

செல்லம் சமையல் பண்ணிக் கொண்டிருக்கும்பொழுது வாசு இங்கிலீஷ் புஸ்தகத்தை எடுத்துக்கொண்டு சமைய லறைக்குப் போய்விடுவான். செல்லத்தை, “ இதற்கு என்ன அர்த்தம், மன்னி? ” என்று கேட்பான். அவள் சமையல் செய்துகொண்டே சொல்லிக்கொடுத்துக் கொண் டிருப்பாள்.

ஈசுவரன் அன்புக்குக் கட்டுப்பட்டுப் பக்தனுக்கு அடிமையாய்ப் போய்விடுகிருன் என்று சொல்லக் கேட் கிரும். அதன் உண்மையைச் சரியாக உணர நம்மால் முடிகிறதில்லை. இந்தச் சிறுபெண்ணின் அன்பும் ஸாமுக மும் நல்லுணர்ச்சியும் எங்கள் எல்லோரையும் எவ்வளவு சுலபமாய்க் கட்டுப்படுத்தி விட்டன என்று நினைக்க நினைக்க என் மனம் பூரித்தது.

துடரச்சாகூட அல்லவா நாளடைவில் வழிக்கு வந்து விட்டான்! சிரித்துக்கொண்டே ஆளை இறக்கிவிடுவாள். இப்படிப் பரிகாசம் செய்துகொண்டே யல்லவா அவனைத் திருப்பிவிட்டாள்!

“ கால் அலம்பிக்கொள்ளாமல் தளிகை பண்ணுகிற உள்ளே வருகிறது என்பது என்ன வழக்கம்? ” என்பாள்.

“ உன் அதிகாரம் என்னடி இங்கே பலக்கிறது? எனக் கெப்படி இஷ்டமோ அப்படித்தான் நான் செய்வேன். நீ யாரடி என்னை அதிகாரம் பண்ணுகிறவள்? இந்த வீட் டில் உன் உபத்திரவம் சகிக்க முடியவில்லையே. பெண் களுக்கெல்லாம் கொஞ்சம் இடம் கொடுத்தால்... ”

“ இடத்தைக் கொடுத்தால் மடத்தைப் பிடுங்குவார் கள்.”

“ அப்படித்தானே இருக்கு? இந்த வீட்டுக்கு நான் எஜமானன். நீ இல்லை. அது கொஞ்சம் ஞாபகத்தில் இருக்கட்டும்! ”

"நீங்கள்தாம் எஜமானர். யார் இல்லை என்கிறீர்கள்? எஜமானரா யிருக்கிறதனாலே சாப்பிட்டுவிட்டுக் கையை அலம்பாமல் தலையில்கூடத் துடைத்துக்கொண்டு விடுவீர்கள்?"

"அப்படிச் செய்ய வேணுமென்று என் சித்தத்தில் பட்டால் செய்யக்கூடத்தான் செய்வேன்."

"போருண்டா, அப்பா துரைச்சா! ரொம்ப சமத்தாய் வார்த்தை சொல்லுகிறாய். வாயை மூடு!" என்பாள் அவன் தாய்.

"பின்னே, இவள் என்னடி என்னை அதிகாரம் பண்ணுகிறது?"

"என்னடா சொல்லி விட்டாள்? தளிகை பண்ணுகிற உள்ளே வரும்போது காலை அலம்பிக்கொண்டு வரக்கூடாதா என்றாள். அதில் என்ன பிசகு? அது ஒரு அதிகாரமா?"

"நான் காலை அலம்பிக்கொண்டு வருகிறேன்; மாட்டேன் என்று சொல்லவில்லை. இவள் சொல்லி நான் செய்கிறது என்று என்ன என்று கேட்கிறேன்!"

"அவள் சொல்லி நீ செய்யவேண்டாண்டா. நீயேதான் செய்யேன்."

அதற்கப்புறம் துரைச்சா கால் அலம்பாமல் உள்ளே வருகிறதில்லை.

"கால் அலமபாமல் உள்ளே வரக்கூடாது என்று உத்தரவு மாத்திரம் போட்டுவிட்டாயே; காலலம்ப ஜலம் எங்கேயாம்? அதைத் தயாராய் வைத்துக்கொண்டிருக்க வேணுமென்று ஞானம் இல்லையே?" என்று வெளியிலிருந்தே கேட்பான்.

இம்மாதிரி ஒவ்வொரு விஷயமாகத் துரைச்சா வழிக்கு வந்து கொண்டே இருந்தான். செல்லம் எங்களுக்குக்

கண்ணுக்குக் கண்ணுய் விட்டாள். வீட்டைச் சுகமும் சந்தோஷமும் சூழ்ந்துகொண்டிருந்தன.

துரைராஜையங்கார் வந்தார். மாட்டுப் பெண்ணைப் பற்றி விசாரித்தார். ரொம்பப் பெருமையாக அவள் புகழை எடுத்துச் சொன்னேன்.

'செல்லத்தின், தாயாருக்குத்தான் ரொம்பக் குறை போல் இருக்கிறது'' என்ருர் துரைராஜம்.

"என்ன குறை?" என்று கேட்டேன்.

"பெண் இங்கே ரொம்பக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறதாக வந்தவர்களோடெல்லாம் சொல்லிக்கொண்டிருக்கிருளாம். 'அதன் தலையில் அந்தமாதிரி எழுதியிருந்தால் யார் என்ன செய்ய முடியும்? எத்தனையோ நல்ல வரன்களெல்லாம் வந்தன. இவனைத் தவிர வேறு ஒருவரையும் பண்ணிக்கொள்ள மாட்டேனென்று பிடிவாதம் பிடித்தாள்; பண்ணிக் கொண்டாள். இப்போ படுகிருள் கஷ்டம்! வீட்டுவேலை பூராவும் இவளதுதானும். மாமியார்க்காரி என்கிறவள் இந்தண்டைத் துரும்பை அந்தண்டை எடுத்துப் போடுகிறதில்லையாம். கால்மேல் கால் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருக்கிருள். காலையில் அஞ்சு மணிக்கு எழுந்திருக்கிறதாம்; இரவு பத்து மணி வரையில் கை கட்டின சேவகந்தான். இது போதாதற்கு இவள் கொஞ்சம் படித்திருக்காளோ இல்லையோ; 'பிரைவேட்' வாத்தியாரை நிறுத்திவிட்டு இவளைப் பசங்களுக்குப் பாடமும் சொல்லிக்கொடுக்க ஏற்பாடு செய்துவிட்டார்களாம். இவள் ஒருத்தி இருக்கும்பொழுது 'பிரைவேட்' வாத்தியாருக்குத் தண்டத்துக்குப் பத்து ரூபாய் கொடுப்பானேன்? அந்தப் பெண்ணுக்கு அரை நிமிஷம் ஓழிவு உண்டா? காற்ருட அரை நாழிகை 'பார்க்'கில் போய் உட்கார்ந்திருக்கிறது என்று உண்டா? ஒரு

ஸினிமாவோ, வேறு ஏதாவது வேடிக்கையோ உண்டா? வீணை ஒன்றைத் தண்டத்துக்கு ஏதுக்கு எடுத்துக்கொண்டு போய் வைத்துக்கொண்டிருக்கிருளோ? போனது முதல் அதை விரலால்கூடத் தொடவில்லையாம். பிர்க்காவைக் கூடக் கழற்றவில்லையாம். அதற்கெல்லாம் எங்கே ஒழிவு? வீட்டு வேலை செய்கிறதிலும் மாமியார் மாமனுருக்குச் சுசுருஷை செய்வதிலுந்தான் எல்லா ஜீவனும் போய்விடுகிறதே! இதற்கு வீணை கேடா? என்னமோ போங்கள்! அதன் தலையில் அப்படி எழுதிவிட்டான்! நாம் துக்கப்பட்டு என்ன செய்வது?' என்று வருகிறவர்களிடத்திலெல்லாம் துக்கப்பட்டுக் கொள்ளுகிருளாம்" என்று துரைராஜையங்கார் சொன்னுர்.

# 14

## இன்பமும் சந்தோஷமும்

எங்கள் வீட்டில் இன்பமும் சந்தோஷமும் சிரிப்பும் விளையாட்டும் உலாவிக் கொண்டிருந்தன. எல்லாம் செல்லம் ஒருத்தியால். வாசுவும் பட்டுக்குட்டியும் செல்லத்துக்காக உயிரை விடுவார்கள். மன்னி சாப்பாடு போட்டால் ருசிக்கிறமாதிரி தாய் போட்டால்கூட அவர்களுக்கு ருசிக்காது, குழந்தைகளுக்குச் செல்லம் தாய்க்குமேல் தாய் ஆய்விட்டாள்.

எனக்கு அவளுடைய சுந்தரமான முகத்தையும் சாந்தமான நோக்கத்தையும் பார்த்து ஆனந்தம் பொங்கிக் கொண்டிருந்தது. என் சம்சாரமோ வாயெடுத்தால், "துரைச்சாவுக்குக் கிடைக்கத் தகாத பெண்ஜாதி. துரைச்சாவின் அதிருஷ்டந்தான்; நாம் பண்ணின புண்ணியந்தான்; கோடியில் ஒரு பெண் நமக்குக் கிடைத்தாள்" என்று சந்தோஷமிகுதியால் கண்ணீர் விடுவாள்.

துரைச்சாவுக்குச் செல்லம் உயிருக்குயிராய் விட்டாள்; நிஜக்காதல் என்பது அவனுக்கு இப்பொழுது தான் ஏற்பட்டது. முதலில் அவளுடைய அழகைப் பார்த்து மோகம் கொண்டான். இப்பொழுதோ அவள் குணத்தில் ஈடுபட்டுவிட்டான். அவள் எவைகளை விரும்புகிருளோ அவைகளை எல்லாம் செய்து அவளைத் திருப்தி செய்து வைக்கிறதிலேயே அவனுக்கு நோக்கம் மும்முரமாய் விட்டது.

நாஸ்திகனுயும் எதைக் கண்டாலும் உதாசீனமாய்ப் பேசிக்கொண்டும், இருந்த பையன் ஸந்தியாவந்தன ஜப தபங்கள் செய்ய ஆரம்பித்துவிட்டான் என்ருல், அவன் நடத்தையில் ஏற்பட்டுவிட்ட மாறுதல்கள் தெரியவில்லையா? யோக்கியமான நல்ல பிள்ளை என்று செல்லம் ஆமோதிக்கவேண்டும், அவளுடைய 'சர்டிபிகேட்டு' கிடைக்கும்படியாகத் தான் நடந்துகொள்ளவேண்டும். அவளுக்கு அதிருப்தியாய் இருக்கிற எதையும் தான் செய்யக்கூடாது என்கிற தீவிரம் அவனுக்கு ஏற்பட்டுவிட்டது.

செல்லத்துக்கு துரைச்சா பேரில் ஏற்பட்ட காதல் அவள் கண்ணேக்கிலேயே பிரதிபலித்துக் கொண்டு இருந்தது.

"உங்கள் பிள்ளை எடுப்பார் கைக்குழந்தை அம்மா. ஒரு வாழைப்பழத்தைக் கையில் கொடுத்தால் முகம் மலர்ந்து நம் பின்னுலேயே ஓடிவருவார். ஒரு தீங்கறியாத குழந்தை சுபாவம், அம்மா!" என்று குழந்தையைக் கவனிப்பதுபோல் அவனைச் சீராட்டிக் கவனித்துவந்தாள்.

அவனைப் பரிகாசம் செய்துகொண்டே அவன் மனத்தைக் கொள்ளை கொண்டுவிட்டாள். சாயந்தரம் ஆபீஸிலிருந்து வந்ததே, "அப்பாடா!" என்று அலுப்பைக் காட்டிக்கொண்டு சாய்வு நாற்காலியில் சாய்ந்தானுல்

அவள் அவனிடத்தில் பரிகாசப் பார்வையுடன் போய்ச் சேருவாள்.

"என்ன 'அப்பாடா' வந்துவிட்டது இப்பொழுது? இதெல்லாம் ஒரு கப் காப்பிக்கு அடிபோடுகிறதோ? மத்தியான்னம் டிபன் காப்பி எல்லாம் ஆச்சோ இல்லையோ? இன்னும்'அப்பாடா' என்ன? சொல்லுங்கோ. காப்பிக்குத் தானே இந்த 'அப்பாடா' வெல்லாம்?" என்று அவனைக் கிண்டுவாள்.

"அப்பா, ஐயா என்று வேஷம் போட்டுக் காட்ட வேண்டாம். காப்பி கொண்டுவந்து கொடுக்கிறேன். சாப்பிட்டுவிட்டு யோக்கியமான குழந்தையா யிருங்கோ" என்று சொல்லிக் கொண்டே காப்பி கொண்டுவந்து கொடுத்துக் கொஞ்சம் அவனைத் 'தாஜா' செய்துவிட்டுப் போவாள்.

துரைச்சா எப்பொழுது பார்த்தாலும் சங்கீதம் ஊளையிட்டுக் கொண்டிருப்பான் என்று முன்னமேயே சொன்னேனே, செல்லம் வந்த பிறகு அது இன்னும் அதிகமாய்விட்டது. அதைக் கேட்டுக்கொண்டு செல்லம் வாயைத் திறக்கமாட்டாள்.

'செல்லம், நீ பெரிய வித்வாம்ஸினியாச்சே; என் பாட்டு என்னமாடி இருக்கு?" என்று போய் அவளைக் கேட்பான்.

"அடடா! உங்கள் பாட்டுக்குக் கேட்பானேன்! நூறு பாட்டுக்கு நுனி தெரியும், ஆயிரம் பாட்டுக்கு அடி தெரியும்!" என்று பரிகாசம் செய்வாள்.

"பரிகாசம் பண்ணுகிறுயே, என் பாட்டு நன்ருயில்லையா, செல்லம்? நான் ஒன்றும் சரியாய்ப் பாடம் பண்ணவில்லை, செல்லம். எனக்கு இரண்டு மூன்று வர்ணம், நாலைந்து கீர்த்தனை சொல்லிக்கொடேன். இல்லாவிட்

டால் நானும் வீணை கற்றுக்கொள்ளட்டுமா, செல்லம்? நீ கற்றுக்கொடுக்கிருயா?" என்பான்.

"கற்றுக் கொடுக்கிறதென்ருல் உங்களுக்குச் சரியாய் வராவிட்டால் வாத்தியாரா யிருக்கிறவன் அடித்துத் திட்டிச் சொல்லிக் கொடுக்கவேணுமே; நான் உங்களை அடிக்கலாமா, திட்டலாமா?"

"நீ அடித்தால்கூட அடி, செல்லம்; வீணை மாத்திரம் சொல்லிக் கொடுத்துவிடு. சரிதானே செல்லம்?" என்று துரைச்சா தினம் வீணை கற்றுக்கொண்டு வந்தான். அதில் எவ்வளவு தமாஷா!

வீடு இவ்வளவு குஷியா யிருந்தது. இந்தச் சுகத்தைக் கெடுக்கத் துரைராஜையங்கார் வந்து சேர்ந்தார். அவர் பேரில் என்ன பிசகு, பாவம்! அவர் காதில் விழுந்ததைச் சொன்னார்.

செல்லத்தைக் கண்ணுக்குக் கண்ணாய் நாங்கள் வைத்துக்கொண்டிருக்க, அவள் இங்கே வந்து கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிருள் என்று அவள் தாய் துக்கப்பட்டுக் கொள்ளுகிருள் என்று கேட்டதும் என் மனம் ரொம்பவும் துன்பத்தை அடைந்தது. "மாட்டை வேலை வாங்குகிற மாதிரி அவளிடத்தில் வேலை வாங்குகிறேமாம்! வெளியில் போகவிடாமல் வீட்டிலேயே கட்டிப்போட்டு வைத்திருக்கிறேமாம்! இரண்டொரு நாட்கள் பார்க்குக்கு அவள் போயிருந்தபோது தனியாய்ப் போகவிடாமல் வாசு, பட்டுக்குட்டி இவர்கள் இருவரையும் பாராவுக்காக அனுப்புகிறேமாம்! என்ன தீய உலகம்!" என்று என் மனசு சகிக்க முடியாத வேதனை யடைந்தது.

"இம்மாதிரி நமக்குப் பட்டம் ஏற்பட்டிருக்கிறதடி" என்றேன் என் சம்சாரத்தினிடத்தில். அவளும் மனக் கஷ்டப்பட்டுக்கொண்டாள்.

"அவர்கள் சொல்லுகிறதும் வாஸ்தவந்தானே? அவர்கள் சொல்லுகிறபடிதானே நாமும் அந்தப் பெண்ணைக் கசக்கிப் பிழிந்து கொண்டிருக்கிறோம்? காலையில் எழுந்தால் இரவு படுக்கப் போகிற வரையில் அது செய்யற வீட்டு வேலை கொஞ்சமா நஞ்சமா? செய்ய வேண்டாண்டி, எல்லாவற்றையும் நான் பார்த்துக் கொள்ளுகிறேண்டி என்றால் என்னைக் கிட்டேகூட வரக்கூடாது என்கிறது. இந்தத் தர்ம சங்கடத்துக்கு என்ன செய்கிறது! அது என்னமோ ரொம்பப் பெருமையும் சந்தோஷத்துடனுந்தான் செய்கிறது. ஆனால் பார்க்கிறவர்கள் என்ன சொல்லுவார்கள்?" என்று என் சம்சாரமும் வருத்தப்பட்டுக்கொண்டாள்.

செல்லத்தினிடத்தில் போய், "நீ இனி வேலை செய்யக்கூடாது; எங்களுக்கு அபவாதம் வருகிறது". என்றால் அந்தப் பெண் மனசு கஷ்டப்பட்டுக்கொள்ளும்.

"துரைச்சா ஆதியில் சொன்னபடி இவர்களைத் தனிக் குடித்தனமாக வைத்து விட்டிருக்கலாம்" என்றாள் என் சம்சாரம்.

"அப்போ செய்திருக்கலாமோ, என்னமோ! இப்போ இந்தப் பெண் வீட்டிலில்லை என்றால் எனக்குப் பொழுது போகாது; வாழ்க்கைச் சந்தோஷமே போய்விடும். இவளை விட்டு ஒரு நிமிஷம் பிரிந்திருக்க முடியாது" என்றேன் நான்.

சாயந்தரம் துரைச்சா வீட்டுக்கு வரும்போதே கோஷம் போட்டு ஆர்வாரம் பண்ணிக்கொண்டே வந்தான். வெளியூரில் ரூபாய் நூற்றிருபத்தைந்து சம்பளத்தில் முனிஸிபல் கமிஷனராக அவனை மாற்றியிருக்கிறதாகவும், ஒரு வாரத்திற்குள் வேலையை ஒப்புக்கொள்ள வேண்டுமென்றும் ரொம்பக் குஷியாகச் சொன்னான்.

துரைச்சாவுக்குச் சம்பளம் உயர்ந்து நல்ல வேலையும் ஆயிற்று என்று ஒருபுறம் சந்தோஷம். துரைச்சாவும் செல்லமும் இல்லாமல் இந்த வீட்டில் எப்படியிருக்கிறது என்று மற்றொரு புறம் ஏக்கம் ஏற்பட்டது.

"மாதம் முப்பத்தைந்து ரூபாய் உங்களுக்கு முதல் தேதி மணியார்டர் செய்துவிடுகிறேன், அப்பா" என்று துரைச்சா பெருமையாய்ச் சொன்னான்.

"மணியார்டர் செய்கிறதாவது! அப்பா அம்மா எல்லோரும் குடும்பத்தோடு நாம் போகவேண்டியதுதான்; முனிஸிபாலிடி; வாஸு, பட்டுக்குட்டி இவர்கள் படிக்கிறதற்கு நல்ல பள்ளிக்கூடம் இருக்கும். மாமனாரும் அம்மாவும் இங்கே என்ன செய்ய வேண்டியிருக்கிறது? வீட்டை வாடகைக்கு விட்டு விடவேண்டியதுதான். எல்லோரும் கிளம்பிப்போக வேண்டியதுதான்" என்றாள் செல்லம்.

கடைசியில் அவர்கள் மாத்திரந்தான் போய்ச்சேர்ந்தார்கள். வீடு வெறிச்சென்று போய்விட்டது! எங்களுக்கு லோகமே பாழடைந்து விட்ட மாதிரி மனச் சோர்வு ஏற்பட்டுவிட்டது.

ஒன்று விட்டொருநாள் செல்லம் தவறாமல் கடிதம் போட்டுக்கொண்டிருந்தாள். ஒவ்வொரு கடிதமும் எங்களை அங்கு வந்துவிடும்படியாக வற்புறுத்தும் கடிதந்தான்.

துரைச்சாவினிடத்திலிருந்து ஒருநாள் கடிதம் வந்தது. அம்மாவுக்குப் பேரன் பிறக்கப்போகிறான்போலிருக்கிறது என்று எழுதியிருந்தான்.

"இனி ஒரு நிமிஷம் நான் இங்கே இருக்கமாட்டேன்" என்று சொல்லி என் சம்சாரம் துரைச்சா இருக்கிற இடத்துக்குக் கிளம்பிவிட்டாள்.

போய் எதை எதையோ சொல்லிச் செல்லத்தை மாம்பலத்துக்கு அழைத்துக்கொண்டு வந்துவிட்டாள்.

"துரைச்சா சாப்பாட்டுக்கு என்ன பண்ணுவான்?' என்றேன்.

"அவன் எதை வேணுமானாலும் பண்ணிக் கொள்ளட்டும்" என்றாள் என் சம்சாரம்.

கோழிக் குஞ்சை அவயம் காக்கிறமாதிரி என் சம்சாரம் செல்லத்தை வைத்துக் கொண்டிருந்தாள்.

செல்லம் அதிகமாக நடந்தாளானால், "ஏதுக்காகடி இப்படி நடமாடிக் கொண்டிருக்கிறாய்? உட்கார்ந்த இடத்தை விட்டு எழுந்திருக்கக்கூடாது" என்று என் சம்சாரம் செல்லத்தை அதிகாரம் பண்ண ஆரம்பித்து விட்டாள்.

முற்றும்

